*Kumaran*

*Āram 2, muttu 41*

*June 10, 1925*

Record no. 313

சிவமயம்.

Registered No. M. 1823. "KUMARAN" Karaikudi.

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

( வாரப் பதிப்பு. )

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.


"திரைகட லோடியுந் திரவியந் தேடு."

"ஆலயந் தொழுவது சாலவு நன்று."

ஆரம். உ } காரைக்குடி, குரோதன ஸு வைகாசி மீ௳ உ அஉ (10-6-25) { முத்து. சுக

## காந்தியடிகள்.

(முன் தொடர்ச்சி.)

கம் நாட்டு மன்னர்களும் ஹிம் சையைக் கடைப் பிடித்தார்கள்; செங்கோலைக் கைக் கொண்டார்க கள். எதற்காக? அஹிம்சையை வளர்ப்பதற்காக ஹிம்சையை மேற் கொண்டனர். தேவர் பொருட்டாக மக்கள் பொருட்டாக—தருமத்தின் பொருட் டாக இம்சையை நடத்தினார்கள். அப்படி யாக ஹிம்சிப்பதை யேற்றுக்கொள்ளலா மா? ஒருவாறு ஏற்றுக்கொள்ளலாம். இப் போது அரசாட்சிக்கு இம்சையே ஆயுத மாக இருக்கிறது. மற்ற தேசங்களின் நோக்க மென்ன? அவர்கள் மற்ற நாடு களைப் பிடித்து அந் நாட்டுப் பொருள் களை யெடுத்துக் கொண்டு போகிறார்கள். நம்மவர்கள் அப்படிக் கொண்டு வந்தார் களா? இல்லை. அவர்கள் மற்ற தேசங் களை வதைத்துப் பொருளைக் கொண்டு போகிறார்கள். அரசியலைச் சீர்ப்படுத்தின லன்றி இந்த உலகமானது ஈடேறுதென் று கருதியே மகாத்மா முயற்சி செய்து வருகிறார். முன்னர் புத்தர், அசோகன் முதலியோர் இப்பணியைச் செய்தார்கள். முந்திய ரிஷிகளைப்போல் சில நூல்களை யெழுதிவிட்டுப் போகவில்லை. ஹிம்சை யைக் கொண்டிருக்கும் தேசங்களை யெல் லாம் சீர்ப்படுத்துவதே நோக்கமாகும். நாட்டினிடை யிருந்தே திருத்த முயல் கிறா ரென்பது குறிப்பிடத் தக்கதாகும். மகாத்மாவின் உபதேச மென்ன? ஹிம் சையை வளர்த்துக்கொண்டே போகிற ஆட்சிகளை ஒழுங்கு படுத்த வேண்டு மென்று கலந்துழைக்கிறார். அஹிம்சா தருமம் எப்பொழுது உலகில் பரவும்? எந்த வழியிலே பரவும்? என்று கேட்கப்படுகி றது. மகாத்மா ஒரு வழியைக் காட்டுகின் றார். அது தமிழ் நாட்டுக்குப் பழமைதான்.

தமிழ் நூல்களில் ஊடல் என்டதொன் றுண்டு. ஒரு நாயகன் இருக்கிறான்; நாய கியும் இருக்கிறாள், அவன் சாராயம், புலால் முதலிய புன்மைப் பொருள்களை உண்கிறான். எவ்வளவு துஷ்டத்தன முண்டோ, அவ்வளவும்செய்கிறான். கொ லைக்கும் அஞ்சாதவனாக விருக்கிறான். நாயகியோ மிக்க இரக்க முள்ளவள். அவ ளை அவன் எல்லா வழியிலும் கஷ்டப் படுத்திக்கொண்டே வந்தான். இப்படிப் பட்ட குடும்பத்திலேயே அஹிம்சை வாழ் வு வரவேண்டும். நாயகியானவள் ஓடி விடுவதா? அண்ணன் தம்பிகளைக் கொ ண்டு கணவனை யெதிர்ப்பதா? அல்லது சூனிய வாதிகளைக் கொண்டு ஏதாவது செய்வதா? அயோக்கியரைக் கொண்டு கணவனைக் கொன்று விடலாமா? இந் நிலையிலேதான் மகாத்மாவின் அஹிம் சை வழியான சத்தியாக் கிரகத்தின் பொருள் தெரியும். அன்பினாலே பிணங் குவது ஊடலாகும். த்வேஷத்தினாற் பிண ங்குவது ஊடலன்று. நாயகன் அறிந்து விட வேண்டுமென்பது நோக்கமன்று. நல்ல வழியில் கணவன் வரவேண்டு மென்பதற்காகவே ஊடல் கொள்கிறாள்.

துன்மார்க்க வழியிற் செல்லும் நாயக னிடத்தில் சென்று 'கெட்ட காரியம் செய்யாதே' என்று கூறுகிறாள். அறியா தவள், பெண்பிள்ளை என்று அலட்சியப் படுத்துகிறான். குடிவெறியினால் அடிக்கி றான், இரண்டு வாரம் புத்தி சொல்லிப் பார்க்கிறாள். பின்னர் இவனுக்கு உதவி பு ரிய மறுக்கிறாள். சில வழிகளில் மட்டும் உதவி செய்து பார்க்கிறாள். மற்றவைக் காகத் தன்புறுத்தவே முழு வேலையை யும் நிறுத்தி விடுகிறாள். அறிவுடைய நாயகனா யிருந்தால் யோசித்துப் பார்ப் பான், படிப்படியாகச் செய்து பார்த் தாள். அவள் சொல்வதென்ன? கெட்ட காரியங்களைச் செய்ய வேண்டா மென் கிறாள். நல்லவனாக இருந்தால் அந் நிலை யிலாவது இணங்கி நல்வழிக்கு வர லாம். கெட்டவனாகவிருந்தால் அடி க்கிறான்; துன்புறுத்துகிறான். ஆனா ல் அவன் ஹிம்சை செய்கிற கால த்திலும் அன்பிருக்க வேண்டும்; நல் லெண்ணம் இருக்க வேண்டுமெ ன்று மகாத்மா கூறுகிறார். கடைசி யில் இப்படி சத்தியாக்கிரகஞ் செய்த நாயகியைக் கொன்று விட்டானென்று வைத்துக்கொள்வோம். வேறொரு மனை வியைக் கல்யாணம் செய்து கொள்ளலா மென்று நினைக்கிறான். கொல்லும் போதும் வருந்த முறவில்லை. இறந்த பின்னராவது வருந்துகிறான். இறந்து போனாலும் அந்த ஆன்மாவின் சக்தியி னால் கெட்ட நாயகன் திரும்புகிறான். கள் குடிக்கப்படாதென்று நாலைந்துபேர் சத் தியாக்கிரகஞ் செய்து இறந்து போனால் குடிகாரனின் மனமானது திரும்பிவிடும், அவ்வாறு இறைவன் அருள்வான்.

கஷ்டங்களைத் தாங்களே அனுபவித்து அரசாட்சிகளை நேர்படுத்த சத்தியாக்கி ரக தருமத்தை மகாத்மா உபதேசித்தார். பின்பற்றுபவர் பத்திரிகை பேச்சு எழுத்து அளவாக சத்தியாக்கிரகஞ் செய்வதால் பயனில்லை. இந்நாட்டில் ஆணுக்கும் பெண்ணுக்கும் சண்டை. தெருவுக்கும் தெருவுக்கும் சண்டை. இவற்றைப் போ க்க சத்தியாக்கிரகம் செய்யலாம். அர சாங்கத்தைத் திருத்தப் பல நல்லவர்கள் சத்தியாக்கிரகம் செய்யலாம். ஆங்கில அரசாட்சியை அழிக்க வேண்டுமென்று சத்தியாக்கிரகம் செய்யவில்லை. மேலு ட்டு அரசாட்சி முறையை ஒழுங்கு படுத் தவே மகாத்மா சத்தியாக்கிரகத்தைப் போதிக்கிறார்.

நம்மவரிற் சிலர் சுயராஜ்யம் வரா தென்று கூறுகின்றனர். வெள்ளாட்டவர் மேட்டார்க்கள் செய்கின்றனர்; மக்கிச கள் செய்கின்றனர்; இன்னும் பல தொழி கள் யூற்றுகின்றனர். அந்த அவர்கட்கு வேண்டியன போக பாக்கி சிறக்கும் போது பெரியவர்கள் கூடினர். இவற்றை

## கல்வெட்டு இலாகா.

### ௧௯௨௩—௧௯௨௪-ம் ஆண்டின் அறிக்கை.

நாட்டின் பழய சரித்திர ஞாபகச் சின்னங்களை யாராய்ந்து கண்டு பிடித்துப் பாதுகாக்கத் தக்கவற்றைச் சட்டபூர்வமாகப் பாதுகாப்பதற்கு அரசாங்கத்தார் ஒரு இலாகாவை ஏற்படுத்தியிருக்கின்றனர். நாட்டில் எந்த விடத்திலேனும் பழய கல் வெட்டுகள், கட்டிடங்கள், சமாதிகள் ஆதியன காணப்பெறின். ஸ்தல அதிகாரிகளோ குடிஜனங்களில் யாரேனுமோ அவ் விலாகாதாருக் கறிவித்தால் அவர்கள் வந்து பரிசிலனை செய்து அவற்றைப் பாதுகாத்தற்கும் அவற்றிலுள்ள பழங்கால சரித்திர உண்மைகளை வெளியிடுதற்கும் ஏற்பாடு செய்வர். இவ் விலாகாதார் ஒவ்வோராண்டிலும் தமக் கெட்டிய இம் மாகாணத்திய சரித்திரக் குறிப்புகளை வருட அறிக்கையாக வெளியிட்டு வருகின்றனர். இப் பிரசுரங்களை இந்நாட்டுச் சரித்திர ஞானத்தில் அவாவுள்ளோர் விலைக்கு வாங்கிப் பயனடையலாம்.

இம்மாதிரியாகச் சென்ற ௧௯௨௩—௨௪-ம் ஆண்டில் அரசாங்கக் கல்வெட்டிலாகாவின் அறிக்கைப் பிரதி யொன்று நமக்குக் கிடைத்திருக்கிறது. பிரஸ்தாப வருடத்தில் இலாகாவின் சிப்பந்திச்செலவு ரூ. ௨௯௫௪௦—௧௨—௦ ஆகிறது. இவ் விலாகாவைச் சேர்ந்த கனம் ஜி.வி. சீனிவாசராவ் அவர்கள் ௧௯௨௩-ம் ஆண்டின் இறுதியில் திருக்கோஷ்டியூரையும் அதற்கு ௨ மைல் தூரத்தில் திருமலையிலுள்ள மலைக் கொழுந்தீஸ்வரர் ஆலயத்தையும் பார்வையிட்டார். செங்கல்பட்டு ஜில்லாவில் கிராமந்தோறும் பழய சரித்திர சின்னங்களுக்காக ஆராய்ச்சி செய்யப்பட்டு வருகிறது. பிரஸ்தாப ஆண்டில் ஆக மொத்தம் ௭௦௯ கல் வெட்டுகளும் ஒன்பது செப்பேடுகளும் இலாகாவின் பரிசீலனைக்கு வந்தன. இம் மாகாணத்திலுள்ள கல் வெட்டுகளின் ஜாப்தா ஒன்று தயார் செய்யப்படுகின்றது.

இராமநாதபுரம் ஜில்லாவில் திருக்கோஷ்டியூர், அரண்மனை சிறுவயல், பெரிச்சிகோயில், நாச்சியாபுரம் அளகாபுரி, கல்லாங்குடி, பிரான்மலை, ஈச்சகுடி (குன்றக்குடியைச் சார்ந்தது) எரியூர், வடவன்பட்டி, திருமலை, மானாமதுரை ஆகிய இடங்களிலும், தஞ்சாவூர் ஜில்லாவில், தஞ்சாவூர், திருவையாறு, பல்லவராயன்பேட்டை, சருவேலி, கோயில் தேவராயன்பேட்டை (பண்டார வாடையைச் சார்ந்தது) ஆகிய இடங்களிலும் திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் மேலூர், மேலப்பழுவூர் ஆகிய இடங்களிலும் பல கல்வெட்டுக்கள் இலாகாவில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

இன்னும் தஞ்சாவூர் ஜில்லாவில் நன்னிலம் தாலுகா அச்சுதமங்கலத்திலும், கீழவாத்திலும், கோயமுத்தூர் ஜில்லாவில் பவானி தாலுகா பவானியிலும் காவேரிபுரத்திலும் அவிநாசி தாலுகா நடுவச்சேரியிலும், சேலம் ஜில்லாவில் சேலம் தாலுகா பொட்டிபுரத்திலும் தர்மபுரி தாலுகா தேவர் முக்குளத்திலும் இராமநாதபுரம் ஜில்லாவில் திருப்புத்தூர் தாலுகா இளையாற்றக் குடியிலும் பள்ளத்தூரிலும் இராதாநூரிலும் சிவபுரியிலும் திருச்சிராப்பள்ளி ஜில்லா உடையார் பாளையம் தாலுகா கீழப்பழுவூரிலும் முசிரிதாலுகா பாலையூரிலும் திருநாராயண புரத்திலும் எடுமலையிலும் செங்கல்பட்டு ஜில்லா மதுராந்தகம் தாலுகா சூரலூரிலும் தென்ஆற்காடு ஜில்லா திண்டிவனம் தாலுகா தனியாலிலும் சிறுவாலூரிலும் வடஆற்காடு ஜில்லா போளூர்தாலுகா பழங்கோயிலிலும் ஆகத் தமிழ் நாட்டில் பல விடங்களில் கல் வெட்டுக ளிருப்பதாகத் தெரியவந்து அவ்விடங்களுக்குச் சென்று பார்ப்பதற்குத் திட்டம் போடப்பட்டிருந்தது.

தஞ்சாவூர் நாயக்கர்களைப் பற்றியும் மராட்டியர்களைப் பற்றியும் சோழபாண்டியர்களைப் பற்றியும் இராமநாதபுரம் சேதுபதிகளைப் பற்றியும் பிரஸ்தாப வருடத்தில் வெளியான கல் வெட்டுகளி லிருந்து சில புதிய சரித்திர ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன.

## சென்னை அரசாங்க ரசாயன பரிசோதனை இலாகா.

சென்னை யரசாங்கத்தாரின் ரசாயன பரிசோதனை இலாகாவின் ௧௯௨௪-ம் வருட அறிக்கை சென்ற மேமாதம் வெளியாகி யிருக்கிறது. முந்தின எந்த வருடத்தைக் காட்டிலும் சென்ற வருடத்தில்தான் அதிகமான பரிசோதனைகள்—௪௧௨௫—நடந்தன. சென்ற ஆண்டில் ௨௩௪ நஞ்சிட்டதாகச் சந்தேகப்பட்ட இனங்களும் ௪௧௭ கறைபட்ட இனங்களும் பரிசீலனைக்கு வந்தன. முன்னையதில் ௧௦௦ இனங்களில் நஞ்சிடப் பட்டிருந்ததாகக் கண்டு பிடிக்கப்பட்டது. இவற்றில் அபின், பாஷாணம், பாதாசம், நாவி, எட்டிக்கொட்டை, சேங்கோட்டை ஆகிய பொருள்களே அதிகமாக உபயோகப்பட்டிருந்தன. ஆனால் பாஷாணம் நஞ்சூட்டப்படுவது வரவரக் குறைந்து வருகிறது.

'தத்தூர' என்னும் நஞ்சுள்ள செடியின் பிரயோகம் சிறு திருட்டுகளின் பொருட்டுப் பிரயோகிக்கப்பட்டது. ரயில்வே திருட்டிலும் இந்த விஷப் பொருள் உபயோகப்பட்டு வருகிறது.

## பிறநாடுகளுக்கு இந்தியக் கூலிப் போக்குவரத்து.

௧௯௨௪-ம் ஆண்டில் சென்னை மாகாணத்தி லிருந்து வேலையாட்கள் பிறநாடு சென்று திரும்பிய கணக்குகள் அரசாங்க அறிக்கையில் வெளிவந்துள்ளன. சென்னைத் துறைமுகத்தினின்று ௨௪௯௭௮ பேரும், நாகப்பட்டினம் துறையிலிருந்து ௨௩௨௧௦ பேரும் சென்ற ஆண்டில் மலாய்நாடு முதலிய விடங்களுக்குச் சென்றனர்.

ஜில்லாவாரிக் கணக்கு.

| | |
|---|---|
| வடஆற்காடு | ௧௪௨௯௯ |
| செங்கல்பட்டு | ௩௫௪௩ |
| சேலம் | ௨௦௫௮ |
| சித்தூர் | ௧௬௭௧ |
| திருச்சிராப்பள்ளி | ௪௨௩௭ |
| தஞ்சாவூர் | ௩௧௯௩ |
| தென்ஆற்காடு | ௧௮௭௪ |
| மலையாளம் | ௧௭௨௪ |
| மதுரை | ௧௬௪௧ |

பிரஸ்தாப ஆண்டில் இலங்கைக்குச் சென்றோர் வேலையாட்களும் ஏனையோருமாக ௧௫௩௯௮௯ பேராவர். இது தான் எவ்வருடத்திய தொகையைக் காட்டினும் அதிகமானது. கங்காணிகளின் நடவடிக்கைகளைப் பரிசீலனை செய்வதற்குக் கடுமையான விதிகள் ஏற்பட்டிருந்தும் அவர்கள் வழக்கம் போல் ஏதுமறியாக் கூலிகளை ஏமாற்றி வருகின்றனர். வேலையாட்கள் சேர்க்கப்படும் ஜில்லாக்களில் நடைபெற்று வரும் சம்பள விகிதம் இலங்கை தோட்டங்களில் நடைபெறும் சம்பளங்களை விடக் குறைந்ததா யிராவிடினும், பிரஸ்தாப ஆண்டில் அதிகமான கூலியாட்கள் பிறநாடு சென்று பிழைக்க ஒருப்படடமைக்கு அரசாங்க அதிகாரி கூறும் காரணம் விசித்திரமானதா யிருக்கிறது.

தென்னிந்தியாவுக்கு மிகச் சமீபமாகவுள்ள இலங்கைக்குச் செல்லும் கூலியாட்களையும் வியாபாரிகளையும் ஏனையோரையும் இந்தியாவின் கரையிலேயே மண்டபத்திலும் தட்டப்பாறையிலும் நிறுத்திக் காக்க வைத்திருந்து பரிசோதனைக் குட்படுத்தி அனுப்பும் முறையை இலங்கையரசாங்கத்தார் இன்னும் கைவிட்டபாடில்லை. இலங்கைத் தோட்டக்காரரின் இலாபத்திற்காகச் செல்லும் கூலிகளை இந்தியாவிலேயே இவ்விதம் கஷ்டப்பட நமது அரசாங்கத்தார் பார்த்துக் கொண்டு வாளா விருப்பதைப்பற்றிப் பன்முறையும் கண்டித்து எழுதியும் பேசியும் ஒன்றும் பலிக்கவில்லை.

விற்க அங்கு முடியாமையால் எங்கு அனுப்புவ தென்று யோசித்தார்கள். அவற்றை வெளி நாடுகட்கு அனுப்பி விற்கலாமென்ற யோசனை வரவே, எப்படி அனுப்புகிற தென்ற யோசனை பிறந்தது. மரக்கலங்களும் சண்டைக் கப்பல்களும் பறவைக் கப்பல்களும் ஒன்றன்பின் ஒன்றாகச் செய்யப்பட்டன. குண்டுகளும் மருந்தும் பீரங்கியும் கண்டு பிடிக்கப்பட்டன. கிடைத்தது போது மென்பவன் மூடன் என்று கூறப்படுகிறது. பூத பௌதிகங்களை வளர்த்து உபயோகிக்கின்றார்கள். நமது தருமம் என்ன கூறுகின்றது? பணந்தேடி இல்லறம் நடத்திப் பின்னர் தவ மேற்கொண்டு செல்வது என்று கூறுகிறது. "ஆசை யறுமின்கள்" என்று நமது பெரியார் கூறுகின்றனர். மேல்நாட்டு மக்கள் ஆசையால் விலங்கு நாகரிகத்தைக் கைக்கொண்டிருக்கின்றனர். இந்த நாகரிகத்தைப் போக்கி அஹிம்சா தருமத்தைப் பரப்பவே மகாத்மா முயற்சி செய்து வருகிறார்.



## சுகாதாரப்பகுதி

### கக்கூசுகள்.

பராசரன் எழுதியது.

காரைக்குடி இப்பொழுது இருப்பதற்கும் முன் இருந்ததற்கும் என்ன வித்தியாசம் என்றால், ஊர் பெருகிற்று; கார் பெருகிற்று; காபிகிளப்பெருகிற்று; சாக்கடைக் குழி பெருகிற்று; நோய்கள் பெருகின; கச்சேரிகள் நிறைந்தன; சுகாதாரம் குறைந்தது. முன் இருந்த காரைக்குடி ஒரு கிராமாந்திரம்; இப்பொழுது ஓர் நகரம். முன் ஊருணிகளில் நீர் சுத்தமாயிருந்தது; இப்பொழுது கெட்டுப் போயிற்று; முன்னிருந்த ஜலவசதி இப்பொழுது இல்லை; முன் போல் இப்பொழுது காலையில் எழுந்திருக்கும் வழக்கமும் நம்மவர்களுக்குப்போய்விட்டது. ஆகவே, முன் இருந்த கக்கூசுகளைக் காட்டிலும் இப்பொழுது கக்கூசுகளும் அதிகமாக இருக்க வேண்டியதிருக்க, அது மட்டும் இல்லை.

ஒவ்வொரு வீட்டிலும் கக்கூசுகளிருக்க வேண்டியது அவசியம். கக்கூசு இல்லாத வீட்டில் குடியிருக்கக்கூடாது. ஒவ்வொரு ஆபீசிலும் கக்கூசுகள் இருக்க வேண்டும்.

பகற்காலங்களில் மல ஜலபாதைக்கு வந்தால் எங்கே போவது? நமது பெண் மக்கள்—நாணத்திலும் வெட்கத்திலும் மற்றவர்களைக்காட்டிலும் மேம்பட்டவரென்று நாம் கொண்டாடும் பெண்மக்கள்—எங்கே மல ஜல பாதைக்குப் போவார்கள்? இந்தப் பெரிய ஊராகிய காரைக்குடியில்—இது இன்னும் பெரிதாகிக் கொண்டே வரும் என்பதில் ஆக்ஷேபணையே கிடையாது—அயலூர் வாசிகள் எவரேனும், அதுவும் பெண் மக்களா யிருப்பவர் எவரேனும், வரின், எங்கே மலஜலபாதைக்குச் செல்வார்கள்?

ஆகையால் இதைச் சிறிது கவனிக்க வேண்டும். நகர வட்டகையில் முக்கிய ஸ்தலமாகிய இந்தக் காரைக்குடியில் ஒவ்வொரு காபி கிளப்பிலும், ஒவ்வொரு சாப்பாட்டுக் கிளப்பிலும், ஒவ்வொரு கட்டிடத்திலும், ஆபீசிலும், தொழிற்சாலையிலும் ஆண் பெண் இருபாலார்க்கும் கக்கூசுகள் துண்டு துண்டாகவோ அல்லது ஒன்றேயாகவோ இருக்கவேண்டும்.

இதை இவ்வூர் வாசிகள் கவனிக்கவேண்டும். ஒவ்வொரு வீட்டுக்காரரும் தம் சொந்த வீடாயிருந்தாலும் அல்லது வாடகை வீடாயிருந்தாலும் எப்படியாவது கக்கூஸ் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். முதலில் இரண்டு வீட்டிற் கொன்றாவது ஏற்படுத்திக் கொள்ளட்டும். இதே மாதிரி வீடுகளில் வாடகைக்கு வருவோர்களும் கக்கூசு உள்ள வீடாகப் பார்த்துக் கொண்டு வாடகைக்குப் போகட்டும்.

மனிதன் எப்பொழுதும் வியாதியில்லாமல் இருக்கமுடியாது. ஊருக்கு வெளியேபோய் வருவது ஒரு சிலருக்கே கூடுமாயினும் பெரும்பாலார்க்கு அது கூடாத காரியமாகும். ஆகையால் ஆண்பாலாரனைவருக்கும் வீட்டில் கக்கூசிருந்தால் சௌகரியமாகவே யிருக்கும். எட்டு மணிக்கு எழுந்திருந்து வாயில் சுருட்டுடன் நான்கு பேர்களாகச் சேர்ந்து கொண்டு—ஊர் நடுவே ஜனங்கள் நடமாடும் இடத்தில்—உட்கார்ந்து மலஜலங் கழித்துக் கொண்டே ஊர் வம்பு பேசும் மக்களும் இந்த காரைக்குடியில்—நாகரீகம் மலிந்த தெனப் பேர்பெற்ற இந்நகரில்—இருக்கிறார்கள். அந்தோ! வெட்கம் சிறிதுமில்லையே! பெண்மக்கள் வரின் தலையைக் குனிந்து கொண்டு இருக்கிறார்களே! பெண் மக்களும் 'சிவ, சிவ' என்று கண்ணை மூடிக் கொண்டு விரைந்து செல்கின்றார்களே!

இனி நம் பெண்மக்களோ விடிவதற்குமுன்னெழுந்து எந்தக்கால் வாயிலாவது எந்தக் குளத்துமடையிலாவது, எந்தத் தெரு வாசலிலாவது போயிருந்துவிட்டு, யாரேனும் ஆண் மக்கள் வரின், அந்தோ! அவசரத்துடன் எழுந்து வரும் கோலம் மிகவும் பரிதாபமா யிருக்கிறதே! பெண் மக்களுக்காகவாவது வீடுகள் தோறும் கக்கூசுகள் கட்டிவைக்கக் கூடாதா?

ஆகையால் மேல்கண்ட கஷ்டங்களை நிவர்த்தி செய்யும் பொருட்டும் சுகாதார விஷயமாய்க் கொஞ்சம் நன்மை யுண்டாகும் பொருட்டும் வீடுகள் தோறும் கக்கூசுகள் அவசியம் வேண்டும்—அதுவும் காரைக்குடி யூனியன் எல்லைக் குட்பட்ட வீடுகளில் அவசியம் வேண்டும் என்று நான் வற்புறுத்திச் சொல்லுகிறேன். இந்த ஊரில் ஹைஸ்கூலுக்குப் பின்புறமும் சப்ரிஜிஸ்டரார் ஆபீசுக்குப் பின்புறமுமிருக்கும் இடத்தில்தான் இந்நகரத்து மாந்தரிற் பெரும்பாலார் மலஜல விசர்ஜனம்செய்வது. காலையில் நான்கு மணிமுதல் இரவில் பதினொரு மணி வரையில் கூட்டம் கூட்டமாய் ஜனங்கள் சென்று ஒருவருடனொருவர் பேசிக்கொண்டே மல ஜலங்கழிக்கிறார்கள். அந்த இடத்தில்தான் யூனியனிலும் சாக்கடைத் தண்ணீரை யெல்லாம் வண்டிகளில் ஏற்றிக்கொண்டு வந்து கொட்டுவது. அதுதான் சந்தைக்குப் போகும் குறுக்குவழி. அந்தோ! இப்படியும் நகர சுகத்துக்கு இடையூறாய் இந்த இடம் கிடக்குமா? ஒரு காம்பவுண்டு சுவரை யாராவது அந்த இடத்துக்கு சொந்தக் காரர்களா யுள்ளோர் எடுத்து, ஒருவரும் அங்கு சென்று ஆபாசப் படுத்தா திருக்கும்படி செய்ய மாட்டார்களா? அப்படி ஒருவரும் செய்யாத பக்ஷத்தில், இந்தகாரைக்குடி யூனியனிலாவது அதைப்பற்றி கவனிக்கக் கூடாதா? அதற்கு நாதி யார் என்று கேட்டு அந்த இடத்தில் காம்பவுண்டு சுவர் எடுத்து ஒருவரும் அங்கே, ஊருக்கு நடுவே, மல ஜலபாதைக்கி இருக்கக் கூடா வண்ணம் செய்யும்படி உத்திர விடக் கூடாதா? நாதியே யில்லாவிடில், அல்லது விவகாரத்துக் குட்பட்டிருப்பின், அவ்வித சொத்துக்கு நாதன் அரசன் அல்லவா? அரசன் என்பவன் யார்? குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நபர் அல்லது கூட்டம் அல்லவா? ஆகையால் காரைக்குடி யூனியன் போர்டார் தானே அதை மேல்பார்த்து, அதில் மற்றெவரும் வந்து ஆபாசப் படுத்தாவண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். ஆகையால் யூனியன் போர்டாராவது ஒவ்வொரு வீட்டிலும் கக்கூசுகள் வைக்கச் செய்வதுடன் அன்னியர்கள், அதாவது அயலூர் வாசிகள், வரின், அவர்கள் சவுகரியத்துக்காவது, சத்திரங்கள், தண்ணீர்ப் பந்தல்கள், சாவடிகள் இவற்றைப்போலவே, பொதுக் கக்கூசுகளையும் முக்கியமான இடங்களில் கட்டிவைத்து அவைகளை அப்போதைக் கப்போது சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டிய ஏற்பாடுகளையும் செய்ய வேண்டும். ஊருணிகளின் மடைகளில் வெளிக்கு இருக்கும் நபர்களை உடனே தண்டிக்கும்படியான ஏற்பாட்டையும் காவல் போடும்படியான ஏற்பாடுகளையும் செய்ய வேண்டும்.

## தேகப்பயிற்சி.

ஆனந்தன் எழுதியது.

நாம் நம்முடைய வாழ் நாளில் தேகத்தைப் பலமாகவும் சுகமாகவும் வைத்துக் கொள்ள வேண்டுமென்பதைப் பலர் அறிந்திருந்தாலும் அதன்படி நடக்கப் பிரயாசை எடுப்பவர் மிகச் சிலரே. சுக நிலை யென்பது அழகின் சாராம்சம்; ஜயத்தின் ஜீவசக்திக்கு இன்றியமையாதது. இது சித்த சமாதானத்திற்கும் சாந்த நிலைக்கும் உரிய மூலாதார ரகசியம். இச்சுக நிலை குழந்தைகளிடத்தில் காணப்படுகின்றது. வயது செல்லச் செல்ல உடம்பின் சுக நிலையும் மன சமாதானமும் குறைந்து போகின்றன. ஆதலால், இச்சுக நிலையை மீண்டும் அடைவதற்கு தேகப்பயிற்சி சிறந்த சாதனமாகும். தேகத்தினின்று மனதை வேறு பிரித்தறிந்து, அதை யடைக்கித் தன்னை யறிந்து, தேகம் நாமல்ல வென்று நீக்க வேண்டிய ஞானிகள் கூட, ஆரம்பத்தில் அப்பியாசம் செய்யும்போது தேகத்தைச் சுகமாகவும் திடமாகவும் வைத்துக் கொண்டால்தான், மனதை ஒரு வழியில் நிலை நிறுத்த அனுகூலமாக விருக்கும். அதிலும் தேகத்தை யோக சாஸ்திரத்தில் விதித் திருக்கும் நிலையில் நிறுத்தினால் மனதை நிலை நிறுத்த அனுகூலம் உண்டாகிறது. மனதிற்கும் தேகத்திற்கும் ஒரு வித சம்பந்த முண்டென்பது நன்கு விளங்கும். உலகில் முன்னேற்றம் அடைந்துள்ள எந்த நாட்டாரும் புத்தி பலத்தோடு தேக பலமும் பொருந்தியவர்களாகவேயிருக்கக் காணலாம். தேக நல மின்றேல் தைரிய மில்லை. தைரிய மில்லாதவர்கள் அன்னியரால் மிக்க அலட்சியப் படுத்தப் படுகின்றனர். ஆபத்து வருமுன் அதைத் தடுக்கமுயல்வது கோழைத் தனமாகாது. ஆபத்து வந்தபோது மனங் கலங்காமல், மானத்தை இழக்க நேர்வதாயின், மரணத்திற்கும் அஞ்சாமல் சமயோசித புத்தியோடு நடந்து கொள்வதே திடசித்தமாகும். இதை யடைவதற்கு தேகப் பயிற்சி அத்தியாவசியமானது. நம் நாட்டில் முற்காலத்தில் ஒவ்வொரு நகரத்திலும் கிராமத்திலும் கஸரத்து பயிற்றுவிக்கும் சிலம்பக் கூடங்கள் இருந்தன. சிலம்ப வித்தை கற்பிக்கும் உபாத்தியாயருக்கு வஸ்தாத் என்று பெயர். வஸ்தாத் என்றால் உருது பாஷையில் உபாத்தியார் என்பது பொருள். ஆனால், அது சாதாரணமாய் 'மல் யுத்தத்தில் கெட்டிக்காரன்' என்ற பொருளில் உபயோகிக்கப் படுகிறது. சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்கூட இம்மல்லக சாலைகள் இருந்தன வென்றறிகிறோம். நம் நாட்டில் அனேகர் இவ்வித்தையில் பிரசித்தி பெற் றிருந்தார்கள். புலியோடு நேருக்கு நேர் நின்று யுத்தம் செய்தவர்கள் பலர் இருந்தன ரென்று சரித்திரம் கூறுகிறது. அந்தோ! வர வர மற்ற விஷயங்களி லெல்லாம் நம்மவர் க்ஷீணதசை யடைந்ததுபோல் இதிலும் அடைந்து விட்டார்கள்.

தேகப்பயிற்சியை எவ்வயதுடையவரும் செய்யலாம். ஆயினும் பாலியப் பருவமே தக்க காலம். இக்காலத்திலுள்ள நமது சிறுவர்களுக்குத் தேகப் பயிற்சியே உண்மையிலில்லை. மல் யுத்தமே இன்னதென்று இவர்களுக்குத் தெரியாது. சில நாட்டாரிட முள்ள வீரத்தன்மை மிருக பல சம்பந்தமான தமோகுணமுடையது. அதற்கு நீதி அநீதி யொன்று மில்லை. அது தன் சுய நல வாஞ்சை கைகூடவேண்டு மென்ற ஒரே நாட்டத்தை யுடையது. அது பொறாமை, தணியா ஆசை முதலியவைகளையுடையது. தெய்வத்திற் கஞ்சாதது. நமது மூதாதைகளிடமிருந்தசுத்தவீரத்தன்மையோ, இரஜோ குண சம்பந்தமான சத்துவகுணம் பொருந்தியது. அது பிறர்க்குத் துன்ப மிழைக்கச் சம்மதியாதது. பொறுமையை அஸ்திவாரமாக உடையது. நீதியையும் சத்தியத்தையும் நிலை நிறுத்தவும், நாட்டிற்காகவும் மதத்திற்காகவும் மானத்திற்காகவும் ஜீவ காருண்யத்திற்காகவும் தன் உயிரைத் தியாகம் செய்வதை நோக்கமாகவுடையது. கடவுள் மேல் வைத்த முழு நம்பிக்கையால் மரணத்திற் கஞ்சாததிடமுடையது. அல்லாமலும் கவிச் சக்கரவர்த்தி குக நம்பியை வர்ணிக்கையில் "கற்காணும் திண்மையான் கரை காணக் காதலான்" என்று கூறுகின்றார். "கண்ணகன் தடமார்பெனும்கல்லினன்." அத்தகைய திண்மை வாய்ந்த மார்புக்கூட்டில் குடி கொண்ட நெஞ்சமோ, அன்புமயமாய்ஒளிர்ந்தது. 'கற்காணும்திண்மை' என்றால் எப்போதும் உடம்பின் தசைகள் கல்லைப்போல இறுகி இருக்கும் என்ப தன்று. தசைகளை இறுகச் செய்தவுடன் அவை கல் அல்லது இரும்புபோல வன்மையுடைய வாகின்றன. ஆனால் சும்மாவிருக்கையில், அல்லது சுகமாக இளைப்பாறுகையில், தசைப்பற்றுக்க ளெல்லாம் வெண்ணெய்போல மிருதுவாய் விடுகின்றன. இது வீரனது சரீர நிலை யென்று (Eugen Sandow) சாண்டோ முதலான மேனாட்டு வீர புருஷர்களும் கூறுகின்றனர். உடம்பு இவ்வண்ணம் திண்மை நிறைந்து விளங்கும் கல் மலையாகவும், உள்ளம் கள்ளம் அற்றுக் கருணை நிறைந்து ததும்பும் இன்பக் கடலாகவும் இருக்க வேண்டு மென்பது வீர புருஷர் கொள்கை. 'அரக்கனைப் போல வலிமையுடையனாயிரு, ஆனால் அவ்வலிமையை அரக்கனைப் போல (கெட்ட வழிகளில்) உபயோகியாதே' என்று ஓர் மகா கவி கூறுகின்றார். வஜ்ர தேகமும் பக்தனது நன்னெஞ்சமும் ஒருங்கே யமையப் பெற்றவன் சிறந்த வீரனாவான். இராட்சத உடம்பு, குழந்தையுள்ளம்—இதுவீரத்தின் லட்சியம். இத்தகைய வீரத்தையே நம் முன்னோர்கள் பெற்றிருந்தார்கள். நம் தாய்மார்க ளாகிய கற்பரசிகளும் இத்தகைய வீரத் தன்மை பொருந்தியவர்களாகப் பிரகாசித்தார்கள். மல் யுத்தத்தில் தேர்ந்தவர்களுக்கு மல்லர்கள் என்று பெயர். பூர்வத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான், பீமன், துரியோதனன், இடும்பன், கீசகன் முதலிய பலர் மல் யுத்தத்திலும் மற்றுமனேகர் யானை ஏற்றம், குதிரை ஏற்றம், வில் வித்தை, வாள் யுத்தம், முஷ்டி யுத்தம் முதலிய பல தேகப் பயிற்சிக்கான முறைகளிலும் தேர்ச்சி பெற் றிருந்தார்களெனச் சரிதங்களில் வாசித்தறிகிறோம். மல் யுத்தத்திலும் குத்துச் சண்டையிலும்தேர்ச்சியடைந்திருந்தால் ஆபத்து நேர்ந்த காலத்தில் ஆயுதமில்லாத ஒருவா எதிரிகள் பலரை வென்று விடலாம். இவை தற்காப்பிற்காகவே பழக வேண்டும். தேகபலம் பெறும் நோக்கத்தோடு பயிற்சி செய்வோருக்கு ஒரு விதத் தன்மதிப்பு உண்டாகிறது. அவர்கள் தேக பலத்திற்கு இடையூறு செய்யத்தக்க துர்க்கிரியைகளில் பிரவேசிக்க மாட்டார்கள். தேகப் பயிற்சியில் உண்மையான பற்று வைக்க வேண்டும். நாம் நினைத்த காரியம் ஜயமாகும் சங்கல்பத்தை விட்டுவிடக்கூடாது. அவதாரப் புருஷர்கள் என்று உலகமெல்லாம் மதிக்கின்ற பெரியார்கள் அனைவரும் தாங்கள் கொண்ட காரியங்களில் பைத்தியம் பிடித்தவர்களா யிருந்திருக்கிறார்கள். இதுதான் நல்ல ஆசையின் ரகசியம். இந்த ஆசைதான் தேகப் பயிற்சிக்கும் வேண்டும்.



### ஈப்போ தனவைசியர் சங்கம்.

(நமது நிருபரிட மிருந்து)

உபந்நியாசம்:—நாளிது வைகாசி மீ எவ மாலை சு மணிக்கு ஒரு கூட்டங் கூட்டப்பெற்றது. ஸ்ரீமாந் பிச. சுப்பிரமணியன்செட்டியா ரவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். யாழ்ப்பாணம் ஹிந்து காலேஜ் பிரின்ஸ்பால் ஸ்ரீமாந் என். செல்வ துரை, பி. ஏ., ஜே. பி., எம். பி. ஈ. அவர்கள் "கல்வியினுங்கில்லை சிற்றுயிர்க் குற்ற துணை" என்னும் விஷயத்தை உபந்நியசித்தார்கள். இரவு அ மணிக்குச் சபை நிறைவெய்தியது.

மகாசபை:—மேற்படி சங்கத்தின் அங்கத்தினர்களின் மகாசபை யொன்று வைகாசி மீ சச உ கூட்டப்பெற்றது. ஐந்தாம் வருடத்திற்கு ஸ்ரீமாந் சா. லெ. ராம. செ. செட்டியப்பசெட்டியா ரவர்கள் தலைவராகவும் ஸ்ரீமாந் ராம. சொ. வீர. அருணசலம்செட்டியா ரவர்கள் உப தலைவராகவும் ஸ்ரீமாந் மு. பழ. பழநியப்பசெட்டியா ரவர்கள் காரியதரிசி, பொக்கிஷதார், புத்தகசாலை யதிபாகவும் ஸ்ரீமாந் அரு. சோம. சு. நாராயணன்செட்டியா ரவர்கள் உதவிக் காரியதரிசி யாகவுந் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள். நிர்வாக சபை அங்கத்தினர்களாகக் கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள்: ஸ்ரீமாந் மெ.செ. முத்தையாசெட்டியா ரவர்கள், ஸ்ரீமாந் மெ. செ. மெ. மெ. நாராயணன்செட்டியா ரவர்கள், ஸ்ரீமாந் மெ. செ. சு. இராமசாமிசெட்டியா ரவர்கள், ஸ்ரீமாந் பிச. சுப்பிரமணியன்செட்டியா ரவர்கள், ஸ்ரீமாந் ப. சா. மு. சு. சுப்பிரமணியன்செட்டியா ரவர்கள், ஸ்ரீமாந் சா. அ. பெரியகருப்பன்செட்டியா ரவர்கள் ஸ்ரீமாந் சுப. லெ. தெய்வராயன்செட்டியா ரவர்கள்.

### கோலப்பிரை.

இவ்வூர் மாரியம்மன் கோவிலில் நிகழும் வைகாசி மீ ககவ ஞாயிற்றுக்கிழமை இரவு எஇ மணிக்கு ஸ்ரீமாந் ராமநாதன் செட்டியார் அவர்கள் அக்கிராசனத்தில் பரம்பக்குடினயச் சேர்ந்த மேலாய்க்குடி தமிழ் அபிவிருத்தி கந்தவேட் சங்க அங்கத்தினர் ஸ்ரீமாந் நா. முத்துராக்கு பிள்ளை அவர்கள் 'பிறனில் விழையாமை' என்னும் விஷயம் பற்றி மிக அழகாகப் பேசினார்கள். கூவ மணிக்கு தலைவரவர்களின் முடிவுரையுடன் சபை இனிது நிறைவெய்தியது என்று ஸ்ரீமாந் மு. பிச்சைமுத்துபிள்ளை எழுதுகிறார்.

### திருக்களரில் குருபூசை மடம்.

நாளிது வைகாசி மதி உகம் நாள் பகல் க மணிக்கு இவ்வூரில் காரைக்குடி திருவாளர் முத்து. அரு. மு. சாமிநாதச்செட்டியாராலும், பாகநேரி திருவாளர் பெரி. அழ. மு. முத்துக்கருப்பஞ் செட்டியாராலும்ரூ. ரு௦௦௦செலவில்அறுபத்துமூன்று நாயன்மார் குருபூசை மடமும், தேவார பாடசாலையும், கட்டிமுடிந்து கிருகப்பிரவேசம்செய்யப்பட்டது. நகரவைசியகுலத்தினரில்சுமார் கரு௦ஜனங்களுக்குஅதிகமாகப்பெண்களும் ஆண்களும் குழுமி இருந்தனர். அன்று தினம் பிராமணர்களுக்கும் சைவர்களுக்கும் சாதுக்களுக்கும் சில ஏழைகளுக்கும் அன்னம் அளிக்கப்பட்டது. மாலையில் தஞ்சை நாகராஜபாகவதரால் நந்தனார் சரித்திரம் பக்க வாத்தியங்களுடன் நடைபெற்றது. இரவு சுவாமி உமாதேவியாருடன் எழுந்தருளிக் காக்ஷி கொடுத்தருளினர்.

அழகப்பன்.

### சோக்கலிங்கம் புத்தூர்.

நிகழும் வைகாசித் திங்கள் இருபத்து நான்காம்நாள் சனிக்கிழமை பிற்பகல் ரு-மணிக்கு மாணிக்கவாசக வித்தியாசாலையின்கண் மணிவாசக மாணவர் சங்கத்தின் ஒன்பதாவது மாதக் கூட்டம் கூடிற்று. கோநகர் கற்பக விநாயக கலாசாலைத் தலைமை யாசிரியர் பிர்மஸ்ரீ ஆழ்வார் அய்யங்காரவர்கள் தலைமை வகிக்க மாணவர்கள் முருகநாயனார் சரித்திரம், தாயுமானவர் சரித்திரம், பெரியாரைத் துணைக்கொள், 'விருந்தினர்ப் பேணுதல் வீடளித்துயர்த்தும், ஆடுகூடச் சைவம் பிடிக்கின்றதே என்னும் விஷயங்களையும் ஷெ வித்தியாசாலைத் தலைமை யாசிரியர் பிர்மஸ்ரீ ரெ. இராமமூர்த்தி ஐயரவர்கள் திருவள்ளுவர் பிறந்த திருநாளை முன்னிட்டுத் திருக்குறள் ஆராய்ச்சியையும் கோநகர் திருவாளர் பி. மு. பி. சுப்பிரமணியன்செட்டியா ரவர்கள் சிறுத்தொண்ட நாயனார் சரித்திரத்தையும் காசிப்பிள்ளை அவர்கள் குங்கிலியக் கலய நாயனார் சரித்திரத்தையும் பிர்மஸ்ரீ கல்யாண சுந்தர கனபாடிகள் பக்தி என்னும் விஷயத்தையும் அழகாக உபந்நியாசம் செய்தார்கள். தலைவரவர்கள் தக்கவாறு முடிவுரை கூற வந்தனோபசாரம் கூறப்பெற்றுத் தேவார திருவாசகங்களோடு ஒன்பது மணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது.

மணிவாசகன்.

---

### காலஞ் சென்ற வ. வே. சு. ஐயர்

காரைக்குடி காணாடுகாத்தான் ஸ்ரீமாந் வயிசு ஷண்முகஞ்செட்டியா ரவர்கள் எழுதுகிறார்கள்:—

ஸ்ரீமாந் வ. வெ. சு. ஐயர் பாபநாச நீர் வீழச்சியில் தமது புதல்வி சுபத்திரையுடன் விழுந்து முழுகிவிட்டார் என்ற கம்பிச் செய்தி மகாதேவரிடமிருந்து கிடைத்தது. அச் செய்தியை நம்ப என்மனம் இடந்தர வில்லை. மறுநாள் "இந்து"ப் பத்திரிகையில் இவ் விஷயம் சிறிது விளக்கமாக வெளி வந்திருந்தது. ஐயருடைய கெம்பீரத் தோற்றத்தையும் அவர் உடல் வலியையும் சமீபத்தில் பார்த்துவந்தபடியால், அத்தகைய ஆண் சிங்கம் உயிர் நீத்திருக்க முடியாதென்ற ஓர் தொனி இன்னமும் உண்டாகிக் கொண்டிருக்கின்றது. ஐயர் நீந்துதலில் நல்ல பழக்கம் உள்ளவர். மனவலியும் உடல் வலியுமுள்ளவர். ஆனபடியால் நீர் வீழ்ச்சியில் போராடி எங்காகினும், ஒதுங்கி யிருக்கலாம். ஈசன் ஆணை எப்படியோ? ஐயர் உண்மையில் உயிர் துறந்திருந்தால் தமிழ் நாடு ஓர் உயர்ந்த புதல்வரை இழந்துவிட்டது. பொறுமையுடனும் கெம்பீரத்துடனும் அவர் பேசிய வார்த்தைகள் இன்னும் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. ஐயரிடத்தில் எனக்கு ஓர் வித பக்தியுண்டு. சிம்ம ஏறுபோன்ற நடையும் சீலமான தோற்றமும் உண்மையில் உயர்ந்த பல எண்ணங்களும் ஒருங்கே வாய்ந்த தியாக புருஷராகிய ஐயர் சபல சித்தங்கொண்டு குருகுல விஷயத்தில் நடந்துகொண்ட முறை, எனக்கு ஸ்ரீஐயரிடத்துள்ள மதிப்பைச் சிறிது குறைத்ததுண்டு. ஆனாலும் ஆராயும் திறனுடைய ஐயர் பல நற்குணங்கள் வாய்ந்தவரானபடியால் (சூழ்ச்சிக்காரரின் மாயவலையில் அகப்பட்டிருப்பினும்) சிறிது காலத்தில் அவருக்குண்மை தோன்றி நேர்வழிக்கு வந்துவிடுவாரென்ற நம்பிக்கை யிருந்தது. இதற்கிடையில் துக்ககரமான இச் செய்தி ஆற்றொணுக் கவலையில் ஆழ்த்துகிறது. அவர் பிரிவிற்காக வருந்தும் அன்பர்கட்கும் அவர் குடும்பத்தினருக்கும் சாந்தி யளிக்கவல்லது சர்வேசுரனுடைய அருளே யாகும்.

## தந்திச்செய்தி.

பினங்கு வைகாசி-மீ உகூ-உ

சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்தைந்து

ஈயம் விலை நூற்றிருபத்தேழு.

ரப்பர்விலை நூற்றுநாற்பத்தைந்து.

(த.வை. ஸ.)

## செய்தித்திரட்டு.

தமிழர் நிர்வாகக் கூட்ட மொன்று வருகிற ஆனி மீ ௯உ வியாழக்கிழமை மாலை ௫ மணிக்குக் கானாடுகாத்தான் ஸ்ரீமாந் வயிசு. ஷண்முகம் செட்டியா ரவர்கள் இல்லத்தில் கூடும்.

* *

எம்பலை யடுத்த அண்டக்குடியில் ஸ்ரீ உமாம்பிகை சமேத அகத்தீசுரர் ஆலயத்திற்கு வருகிற ஆனி மீ உ௯உ புதன்கிழமை முற்பகலில் மகாகும்பாபிஷேகம் வெகு விமரிசையாய் நடைபெறும்.

* *

இராமச்சந்திரபுரம் ஸ்ரீமாந் நி.நா.முத்தையா செட்டியா ரவர்களுக்கு 'திவான் பகதூர்' பட்டமும் பள்ளத்தூர் ஸ்ரீமாந் உ. அ. உ. க. சிதம்பரம் செட்டியாரவர்களுக்கு 'ராவ்சாகேப்' பட்டமும் சக்கரவர்த்தி முடிசூடிய நாளன்று அரசாங்கத்தாரால் மனமுவந்து அளிக்கப் பெற்றிருக்கிறது. இருதனவான்களும் மிகுந்த தர்ம சீலர்களும் ஏழைகள்பால் கருணை நிறைந்தவர்களு மாதலால் எவ்வித உயர்ந்த பட்டமும் அவர்களுக்குத் தகுதியானதே யாம்.

## கப்பற் செய்தி.

—o—

'எக்மா' கப்பல் இரங்கூனி லிருந்து நாளிது வைகாசி மாதம் உகூ-ம் தேதி திங்கட்கிழமை சென்னை வந்து சேர்ந்தது. க௦உ வெள்ளிக்கிழமை இரங்கூனுக்குப் புறப்படும்.

'எல்லோரா' கப்பல் மலாய் நாட்டிலிருந்து ஆனிமீ கஉ செவ்வாய்க்கிழமை சென்னைக்கு வந்து சேரும். அஉ ஞாயிற்றுக்கிழமை நாகையி லிருந்து மலாய் நாட்டுக்குப் பிரயாணமாகும்.

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போது மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.
—அருணகிரிநாதர்.

குமரன், காரைக்குடி.
குரோதனஹு வைகாசிமீ உஅ.

## ஈப்போ மகாநாடு.

இரண்டாவது மலாய் நாட்டுத் தனவைசிய மகாநாடு உச, உடு-ம் தேதிகளில் ஈப்போ நகர மண்டபத்தில் நடைபெற்றது. அம் மகாநாட்டின் தலைவரது சொற்பொழிவும், உபசரணைச் சபைத் தலைவரது சொற்பொழிவும் பிறிதொரு பாங்கர் வெளியாகின்றன. உபசரணைத் தலைவர் ஸ்ரீமாந் மெய்யப்ப செட்டியாரவர்களின் உபந்யாசத்தைக் கவனிக்கும்போது அதில் மனதை ஈர்க்கும் விஷயங்கள் பல காணப்படுகின்றன. வெம்பிளி கண்காட்சிக்குச் சென்ற பேரா சுல்தான் லண்டனில் விருந்துண்டுவிட்டுப் பேசும்போது நம்மவரைப் பற்றிச் சில இழிவுரை பகர்ந்தார். (இவ் விஷயத்தை ஏற்கெனவே 'குமரன்' கண்டித்துள்ளான்.) அதனை ஏற்றுக்கொண்டிருத்தல் படாதென்று இவ்வுபந்யாசத்தில் குறிப்பிட்டிருப்பதை நாம் மிக மிகப் பாராட்டுகின்றோம். நம்முடைய விரோதிகள் முதன் முதலில் சுல்தான் போன்ற பொறுப் புள்ளவரின் வாயிலிருந்து இம்மாதிரியான உரைகள் வெளிவரச்செய்வது வழக்கம். இதனை மாற்றிக் கொள்வது இன்றியமையாததாகும். இரண்டாவதாகப் பெரிய பெரிய கோவில்கள் ஏராளமான பொருளைச் செலவிட்டுக் கட்டுவதைவிட கோவிலிலுள்ள இறைவனைவழிபடும்மார்க்கங்களைப் பற்றி மக்கட்கு அறிவுறுத்தும் பணியே சிறப்புடையதென்றவுரை அறிஞர் உளத்தை ஈர்ப்பதாகும். திருவிழாக் காலங்களில் கவனிக்கப்பட வேண்டிய பல விஷயங்களைக் குறிப்பிட்டுள்ளார்கள். அவையும் முக்கியமானவையாகும். இடும்பன் பூசையில் ஆடுகளை வெட்டி வீழ்த்துவதைப் பற்றிக் கூறியிருக்கும் நல்லுரைகளை அன்பர்கள் உற்று நோக்குதல் வேண்டும். முருகக் கடவுளின் உண்மையான பக்தனான இடும்பனுக்கு ஆடுகளை வெட்டி ஆராதனை செய்வது எந்த விதத்தில் பொருத்தமுடையதாமோ? நம்முடைய சமயப் பெருமையினை அறியாமையினாலேயே அப்படிச் செய்கிறார்களென்று கூறுவது மிகையாமோ? நமது சைவ நன் மக்கள் தங்கள் வாழ்வைப் புனிதப் படுத்திக் கொள்வதில் முதற்பணியாக நிற்பது கொல்லாமையே யாகும். ஆகவே அன்பர்கள் இப் புல்லிய வழக்கத்தை விட்டு விரைவில் விலகவேண்டுமென்று கூறவேண்டியதில்லை. இதில் நமது மெய்யப்ப செட்டியாரவர்கள் ஊக்கங் கொண்டுபேசியுள்ள வார்த்தைகளைப்போற்றுகிறோம்.

இனி தலைவர் ஸ்ரீமாந் வைரவன் செட்டியாரவர்களின் உரை நம்மினத்தவர்க்குப் பேரூக்கந்தருமாறு வீரச் சொற்கள் நிறைந் திருக்கின்றது. சமூகத்தாரிடையிற் கொண்டுள்ள அன்பும் சீர்திருத்த வழிகளிற் கொண்டுள்ள அபிமானமும் அவ்வுரைகளில் பொதிந்துகிடக்கின்றன. நமது ஊழியர் சங்கமானது இதுகாலை உறங்கிக் கிடப்பினும் ஆரம்ப காலத்திற் செய்துள்ள பெரு நன்றியைக் கொண்டும் இனிமேல் அது பல அரிய வேலைகளைச் செய்யு மென்ற நம்பிக்கையைக் கொண்டும் அச்சங்கத்தைப் பாராட்டிப் பேசியிருப்பதற்கு நன்றிசெலுத்து கின்றோம். உண்மையில் சங்கம் செய்த வேலை எளிதானதன்று. ஆயினும் மக்கள் எதிர்பார்த்த பயன் கிடைக்காது இடைமறிக்கப்பட்டது இறைவன் செயலென்றுபொதுப்படக்கூறிச்சென்றதும்நியாயமானதேயாகும். அவர்களுடைய உபந்யாசத்தில் பினாங்கில் நகரவிடுதி அமைப்பதைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இது மிக இன்றிமையாததாகும். சென்ற ஆண்டில்கூடிய முதலாவது மகாநாட்டிலும் இப்பிரஸ்தாபம் வந்துளது. இன்றியமையாததான இம்முயற்சியை இதுகாலை எளிதாக முடிக்கவழியுமுளது. அன்பர் வைரவன் செட்டியாரவர்கள்தம் உரைகளில் வியாபார முறையைக்கொள்ளுதல் இன்றியமையாதது மென்று கூறியிருக்கிறார்கள். உபசரணைச்சபைத்தலைவராலும் இதனைப் பற்றி விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. வட்டித் தொழிலைவிட வியாபாரம் சிறந்ததே யாகும். ஆனால் நம்மவர் இன்றிருக்கிற நிலையில் வியாபாரத்தைவிட வட்டித்தொழிலே சிறப்புடையதாகுமென்றுநாம் கூறுவோம். வட்டித் தொழிலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டபடியாகவே வியாபாரத்தில் தலையிடவேண்டும். வியாபாரத்திற் பழக்கமுண்டாகி லாபங்காணும் வரை வட்டித் தொழிலைத் திறம்பட நடத்திச் செல்லுதல் அவசியமாகும். வட்டித் தொழிலையும் பாங்கிகள் நடைபெற்று வருகிற முறையில் திருத்தியமைக்கவும் முயலல் அவசியமாகும். இதனைப் பற்றி மற்றொரு முறை விரித்தோத விரும்பியுள்ளோம். இருவருரையிலும் வட்டித் தொழிலை வேண்டாமென்று கூறவில்லை. வியாபாரம் சிறப்புடையதென்றும், அதனை யேற்றுப் பெரும் பொருள் சம்பாதிக்க வேண்டுமென்றுங் கூறப்பட்டுள்ள அரிய வுரைகளைப் பொன்னேபோற்போற்றுகின்றோம். பின்னர் கல்வியபிவிருத்தி செய்தல் வேண்டுமென்று உருக்கமுடன் கூறியிருப்பது பாராட்டத் தக்கதாகும். பினாங்கு முதலிய சில பெரிய ஊர்களிலாவது நமது சிறுவருக் கென்று கலாசாலைகள் ஏற்பட வேண்டுமென்று பேசியிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். பஞ்சாயத்து முறை எடுபட்டுப் போனது முதல்தான் நம்மவருக்குள் பலவகையான மனமாறுபாடுகள் உண்டாகி விட்டன என்பதை நன்குணர்ந்து பஞ்சாயத்து முறைகளின் அவசியத்தை யெடுத்துக்கூறி விளக்கி யுள்ளார்கள். ஆங்குள்ள அன்பர்களும் தாய் நாட்டிலுள்ளவர்களும் இவ்வுரைகளை உற்று நோக்குவாராக. பொதுவாக இவ்விரு அன்பர்களும் வழங்கியிருக்கிற அன்புரைகளைப்படித்துணர்ந்து அவ்வழி செல்ல நமது சமூக மக்கள் முயலல் அவசியமாகு மென்று கூறி இன்று அமைகின்றோம். மகா நாட்டுத் தீர்மானங்களை யெதிர் நோக்கியிருக்கின்றோம்.



## ஸ்ரீமாந் வ. வெ. சு. ஐயர் காலஞ் சென்றார்.

ஸ்ரீமாந் வ. வெ. சு. ஐயரும் குருகுல மாணவர்களும் ஐயர் அவர்களின் பதினான்கு வயதுக் குமாரத்தி சுபத்திரையும் பாபநாசத்திற்குச் சென்றனர். உகவ புதன் கிழமை யன்று மாலையில் ஏறிக் கல்யாண தீர்த்த நதியைத் தாண்ட விரும்பிப் பெண் இறங்கிச்செல்லும் போது தவறி நீராலிழுக்கப்பட்ட போது தனது பெண்ணைப் பாதுகாக்க நினைத்து நீரில் இறங்கிய ஐயரையும் சேர்த்து நதியானது கொண்டு போய்விட்டதென்ற செய்தி கிடைத் திருக்கிறது. ஸ்ரீமாந் வ. வெ. சு. ஐயரை இதுகாலை அறியாத தமிழர் இரார். ஸ்ரீமாந் ஐயர் சிறந்த தேசாபிமானி. உயர்ந்த தியாகி. சிறந்த சீலமுடைய பெரியார். இவரது உயர்ந்த குணங்களைப் போற்றாத மக்களில்லை. தேச நலத்தின் பொருட்டுத் தம் வாழ்வைத் தியாகஞ் செய்த பெரியார் திடீரென இறந்தாரென்ற செய்தி தமிழுலகைத் திடுக்கிடச் செய்துவிட்டது. இப் பெரியார் தம் இளமைப் பருவத்தில் இங்கிலாந்தில் பாரிஸ்டர் படிப்புப் படித்துக்கொண்டிருந்த காலத்தில் ஒரு கொலைக் கேஸில் சம்பந்தப்பட்டதாகக் கைதி செய்யப் படவேண்டிய சமயத்தில் மறைந்து வெளிப் போந்து புதுச்சேரி சேர்ந்தார். அங்கு பன்னிரண்டாண்டுகள் மறைந்துறைந்தார். பின்னர் 'தேசபக்தன்' பத்திரிகையின் ஆசிரியராகச் சிலகால மிருந்தார். பின்னர் தமிழ் நாட்டு மக்களை உயர்வுறச் செய்வேனெனக் குருகுலந் தொடங்கினார். நேயர் மிகச் சிறந்தவராயினும்— சூழ்ந்து கிடந்த போலிப் பிராமணரின் சூழ்ச்சியின் வசப்பட்டுத் தங் கொள்கையை விட்டுக் கொடுத்து வைதிகரைச் சமாதானப் படுத்த எண்ணி இத் தமிழ் நாட்டிற் பெரியதொரு கிளர்ச்சிக்கு இடங் கொடுத்துவிட்டதை யெண்ணிப் பலரும் வருந்த வேண்டிய தாயிற்று. இப் பெரியாரைப் பொன்னே போற் போற்றிய தமிழ் நாடு—தனவைசிய நாடு— சில வெறுப்புரையுங் கழற முற்பட்டது. எனினும் பேசும் போதெல்லாம் ஐயரின் நறுங் குணங்களைப் புகழ்ந்து கொண்டே கண்டனங்கள் தோற்றின வென்பதனாலேயே ஐயரின் உயர்வு இனிதுவிளங்கும். நீந்துதலிலும் உடல்வலியிலும் சிறந்திருந்த ஐயர் நீரில் விழுந்து இறந்து போனாரென்ற செய்தி ஆச்சரியப்படத்தக்கதே யாகும். தமிழ் நாடு தனது அருமைப் புதல்வரொருவரை இழந்து விட்டது. தனது அரிய நாயகனையும் அருமைப் புதல்வியையும் ஒரே நாழிகையில் இழந்து வருந்துகிற ஐயரது மனைவியாரின் கஷ்ட நிலையை யெண்ணி யெண்ணி வருந்துகின்றோம். ஐயரது ஆன்மா சாந்தியடையுமாறு இறைவனை இறைஞ்சுகின்றோம்.

## எண்டிசைக்காட்சி.

### இராஜாங்க சபை — எலெக்ஷன்.

டெல்லி ராஜாங்கசபை (Council of State) அங்கத்தினர்களின் எலெக்ஷன் நடைபெறவிருக்கிறது. ஆந்த சென்னை மாகாணத்தின் மகமதியரல்லாத தொகுதிக்குள்ள நான்கு ஸ்தானங்கள் உள்ளன. அவற்றில் ஒன்றுக்கு நமது குலமணியான சர் மு. அ. அண்ணாமலைசெட்டியாரவர்கள் அபேக்ஷகராக நிற்கிறார்களென்றறிகிறோம். ஸ்ரீமாந் செட்டியாரவர்களைப்பற்றி நமது குலத்துதித்த யாவருமே நன்கு அறிவர். அவர்கள் உயர்ந்த ஸ்தானங்கள் பெற்றிருப்பதால் நமது குலத்தினர் அடைந்து வருகிற நலங்கள் கொஞ்சமன்று. இப்போது அவர்களால் அபேக்ஷிக்கப்படுகிற ராஜாங்க சபைக்கு வாக்குக் கொடுக்கும் உரிமையுள்ள நம்மவ ரியாவரும் தங்கள் வாக்கை ஸ்ரீமாந் மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்கட்கே கொடுக்க வேண்டுமென்று சிபார்சு செய்கிறோம்.

### படிப்பின் பயன்.

நாளிது வைகாசிமீ உகவ. நெற்குப்பை ஸ்ரீமாந் கு. பழ. சு. பழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் குமாரன் பழனியப்பனுக்கு; பூலாங்குறிச்சி ஸ்ரீமாந் ராம. ப. ராம. மு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் குமாரி உண்ணாமுலையெனும் பெண்ணை விவாகம் செய்வித்தனர். இப் பெண் நன்றாகப் படித்திருப்பதாக அறிகிறோம். அதன் பயனாக கல்யாண காலத்தில் அளவு கடந்த சாமான்களை வாங்கி வைக்கவேண்டியது அவசியமில்லையென்றும் சாதாரணமாக ஒரு குடும்பத்திற்கு வேண்டிய அளவு வைத்தாற் போதுமென்றும் பெண் கூறினளென்றும் அதனைக் கேட்ட தாம் தந்தையார் அவ்வார்த்தையை அங்கீகரித்து அளவு கடந்த சாமான்களை வைப்பதைநிறுத்திக் குடும்பத்திற்குச் சாதாரணமாக இன்றியமையாததான சாமான்களைப் போல் இரட்டிப்பு வைத்தனரென்றும் டாக்சி குறிப்பிட்ட சாமான்களின் விலையை ரொக்கமாகக் கொடுத்தார்களென்றும் தெரிகின்றது. இதுவே பெண் கல்வியின் பயனாகும். எல்லாப் பெண்களும் படித்து அறிவு பெறுமானால், அனாவசியமான செலவுகளை அடக்க முன்வருவார்களென்று கூற வேண்டியதில்லை. பெண்களின் கல்யாண காலங்களில் ஆடம்பரத்தைப் பெரும்பாலும் பெண்மக்களே விரும்புகின்றன ரென்பதில் பொருளில்லாமலில்லை. ஆதலால் யாவரும் தங்கள் பெண்மக்களைக் கல்வி கற்குமாறு செய்தலவசிய மாகும்.

## உள்ளூர்ச் செய்தி.

ஹிந்துமதாபிமான சங்கம்:—முன்னர் அறிவித்தபடியே இச்சங்கமானது நகரச் சிவன்கோவில் சந்நிதியில் ஸ்ரீமாந் ராம. மு. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் கட்டிடத்திற்கு நாளிது வைகாசிமீ உகவ திங்கட்கிழமை காலையில் மாற்றப்பெற்றிருக்கிறது.

காரைச் சிவனடியார் திருக்கூட்டம்:—நாளிது வைகாசிமீ உகு உகவகளில் நகரச் சிவன்கோயிலில் திருஞானசம்பந்தப் பெருமானார் திருநாளை முன்னிட்டு திருவாளர்களான சேவு. மெ. மெய்யப்ப செட்டியார், கா. கா. அள. காளையப்ப செட்டியார், ராம. சொ. சொக்கலிங்கையா ஆகிய மூவர்களும் பிரசங்கங்கள் செய்தார்கள். நால்வர்க்கும் விசேஷ அபிடேக அலங்காரங்கள் செய்யப்பெற்றன. ஞானப்பால் கொடுக்கப் பெற்றது. சுவாமி சிவிகை ஊர்ந்து திருவீதி வலம் வரும்போது பி. அ. தேவாரப் பாடசாலை ஓதுவார்களால் தேவாரந் திருவாசகாதி பாசுரங்கள் ஓதப்பெற்றன.

அநுதாபக் கூட்டம்:—தமிழ் நாட்டின் உத்தம தேச பக்தராகவும் சேரமாதேவி குருகுலத்தின் ஆசிரியராகவுமிருந்து அருவியில் விழுந்து அகால மரண முற்ற ஸ்ரீமாந் வ. வெ. சு. ஐயரவர்களுக்காக அநுதாபக் கூட்ட மொன்று 'குமரன்' ஆபீஸில் நாளிது வைகாசிமீ கூ௦வ வெள்ளிக்கிழமை மாலை ௬ மணிக்கு நடைபெறும். அவ்வமயம் அன்பர்களின் வரவு எதிர்பார்க்கப்படுகிறது.



## வைசியநாட்டுச் செய்தி

### புதுவயல்.

இவ்வூர் ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின் ௬௫-வது மாதக் கூட்டம் வைகாசி மீ உகஉ புதன்கிழமை மாலை ௬ மணிக்கு நகரப் பிள்ளையார்கோவிலில் காரைக்குடி திருவாளர் கா. கா. காளையப்பசெட்டியா ரவர்கள் தலைமையில் கூடிற்று. பழ. இராமநாதன், காரைக்குடி திருவாளர் சேவு. மெ. மெய்யப்பசெட்டியார், வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியார் இவர்கள் முறையே தாய்தந்தையினுடைய அருமை, திருஞான சம்பந்தர், கொலைமறுத்தல் என்னும் விஷயங்களை அழகாகப் பேச சபை மங்கள வாழ்த்துடன் இனிது நிறைவேறியது என்று சங்கத் தலைவர் வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியார் அறிவிக்கிறார்.

### கோப்பனுபட்டி.

இவ்வூர் விவேகாநந்த வாசகசாலையின் மூன்றுவதாண்டுநிறைவுவிழா நிகழும் வைகாசி மீ உ௫-உ மாலை ௬ மணிக்கு காரைக்குடி 'குமரன்' ஆசிரியர் திருவாளர் சொ. முருகப்பசெட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. முதலில் கடவுள் வாழ்த்துக் கூறியவுடன் ஸ்ரீமாந் பழ. அ. மெய்யப்ப செட்டியாரவர்கள் நல்வரவேற்பு, அறிக்கை முதலியன படித்தார்கள். பிறகு தலைவரவர்கள் எழுந்து முகவுரையாக அரைமணி நேரம் சுவாமி விவேகாநந்தரைப் பற்றி அழகாகப் பேசினார்கள். பிறகு வேந்தன்பட்டி திருவள்ளுவர் கலாசாலை மாணாக்கிகளாகிய ராம. சொர்னம், பழ. மீனாக்ஷியாகிய இருவரும் முறையே, 'பெண்கல்வி' 'கற்பு' என்னும் விஷயங்களைப் பற்றியும் மேலைச் சிவபுரி ஸ்ரீ சொ. பனையப்பசெட்டியா ரவர்கள் திருஞான சம்பந்தரைப் பற்றியும், வேந்தன்பட்டி ஸ்ரீ நா. சோமசுந்தரச்செட்டியா ரவர்கள் காரைக்கா லம்மையார் சரித்திரத்தையும் புதுக்கோட்டை 'ஜனமித்திரன்' ஆசிரியர் ஸ்ரீ எஸ். விஸ்வநாதய்ய ரவர்கள் 'பிறவிப் பயன்' என்பதையும், மேலைச் சிவபுரி சன்மார்க்க சபைத் தமிழாசிரியர் ஸ்ரீ ஆ. பூவராகம்பிள்ளை யவர்கள் 'பண்புடைமை' என்பதையும் பேசினார்கள். பிறகு தலைவரவர்களின் விரிந்த முடிவுரையுடன் இரவு ௯ மணிக்கு முடிவுபெற்றது. சென்னை 'நவசக்தி' ஆசிரியர் ஸ்ரீ திரு. வி. கலியாண சுந்தர முதலியா ரவர்களால் எழுதப்பட்டு இவ் வாசகசாலையின் துண்டுப் பிரசுரமாக வெளியிட்டிருக்கின்ற 'இன்பவாழ்வு' என்னும் புத்தகமும் காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத் துண்டுப் பிரசுரங்களும் வழங்கப்பட்டன என்று காரியதரிசி எழுதுகிறார்.

### வேந்தன்பட்டி.

**தண்ணீர்ப்பந்தல்:**—இளைஞர்கள் தண்ணீரில்லாத இக் காலத்துத் தண்ணீர் வைத் துதவியது போற்றத்தக்கது.

**உபந்யாசங்கள்:**— நாளது மீ உகஉ இரவு ௧0 மணிமுதல் ௧௨ மணிவரை காரைக்குடி, "குமரன்" ஆசிரியர் திருவாளர் சொ. முருகப்பசெட்டியா ரவர்கள் தலைமை வகித்து முகவுரையாக "முருகன் பெருமை" என்பதை அழகாகப் பேச, ராம. சொர்ணம் "நமது பெண்களும் கைத்தொழிலும்" என்பதையும், பழ. மீனாக்ஷி "போர்த்தொழில் புரியேல்" என்பதையும், கதி. சிவலிங்கம் "புலையும் கொலையும்" என்பதையும், சோம. பாப்பாயி "பெண்கல்வி" என்பதையும் பற்றிப் பேசினார்கள். தலைவரவர்கள் முடிவுரை நீண்ட நேரம் பேசினார்கள். ஸ்ரீவெ. சி. பழ. மெய்யப்பசெட்டியா ரவர்களால் இனாமளிக்கப்பெற்ற திருக்குறள் புத்தகங்களைத் தலைவரவர்கள் திருவள்ளுவர் கலாசாலை மாணாக்கர், மாணாக்கியரில் திருக்குறள் பரீக்ஷையில் தேறியவர்களுக்குப் பரிசளித்தனர். நாளது மீ உசஉ மாலை ௪ மணிமுதல் ௭இ மணிவரை ஸ்ரீமாந் சொ. முருகப்பசெட்டியா ரவர்கள் "ஒழுக்கம்" என்பதைப்பற்றிப் பலர் மனமும் உருகுமாறு உபந்யசித்தார்கள்.

**திருநீலகண்ட நாயனர் சரித்திரம்:**—இந் நாயனர் சரித்திரத்தை இந் நகர்த் திருவள்ளுவர் கலாசாலை மாணாக்கர் மாணாக்கியர்—௧0 வயது நிரம்பப் பெருத சிறுவர் சிறுமியர்—பெருந்திரளான கூட்டத்தில் நடாத்திக் காண்பித்து மக்களுக்குப் பல நீதிகளைப் போதித்தனர். எல்லா மக்களும் இன்பக் கடலுட் டிளைத்திருந்தனர். ஸ்ரீ சொ. முருகப்பசெட்டியா ரவர்கள் கதையை யொட்டியும் சில உரைகளை வழங்கினார்கள். விசாகவிழா சிறப்புடன் நிறைவுற்றது என்று நா. சோமசுந்தரம் எழுதுகிறார்.

### கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டம்.

இவ்வூர் திருவாளர் ச. கரு. நாகப்ப செட்டியா ரவர்களுக்கு (உபதலைவர்) நாளது மீ கசு-உ நடைபெற்ற கல்யாணத்தில் நமது திருக்கூட்டத்திற்கு ரூ (௫) ஐந்து சம்பாவனை யளித்துள்ளார்கள். அவர்களுக்கு எங்களது நன்றியறிதலைச் செலுத்துகின்றேம் என்று காரியதரிசி எழுதுகிறார்.

### வலய மாநகரில் தடாகப் பிரதிஷ்டை.

இவ்வலயமா நகரிலுள்ள வையாபுரி என்ற திருக்குளத்தை இந்நகர் வயி. சுப. லெ. குடும்பத்தார்கள் ஆழத்தாலும் அகலத்தாலும் பெரிதாக்கிக்கட்டமுன் வந்து கடந்த இரத்தாட்சி யாண்டு வைகாசித் திங்கள் ௬-ம் நாள் திங்கட்கிழமையாகிய நன்னாளில் இறையருளைத் துணையாகக் கொண்டு தொடங்கி அவனருளால் அதனை இனிது முடித்து நாளிது குரோதன ஆண்டு வைகாசித் திங்கள் ௧௫-ம் நாள் வியாழக்கிழமையாகிய நன்னாளில் உள்ளூர் நகரத்தார் அனைவரோடுங் குழுமி வடுவகிர் விழியாள் சமேத வலம்புரிநாதர் கணபதி முருகப்பெருமான் முதலியோர் திருக்கோயில் கொண் டெழுந்தருளியுள்ள ஆலய மடைந்து எல்லாத் தெய்வங்கட்கும் அபிஷேகவாராதனை முதலியன சிறப்பாகச் செய்து அண்மையிலுள்ள திருக்குளத்தை யடைந்து வந்துள்ள நகரத்தார்க ளனைவர்கட்கும் பலவித இனிய சிற்றுண்டிகளும் கடவுட் பிரசாதத்துடன் சந்தன தாம்பூலமும் வழங்கப்பெற்று தடாகப் பிரதிஷ்டையும் மிக மங்களகரமாக இனிது நிறைவேறியது. ௮-ம் நாள் ஞாயிற்றுக் கிழமையாகிய நன்னாளில் இந் நகரைச் சார்ந்த ஏனைய கிராமங்களிலுள்ள பல ஏழை ஜனங்களுக்கு அறுசுவையோடு கூடிய நல்லுணவும் படைத்து இந் நாட்டிலுள்ள ஏனையோர் மனமுந் தண்ணெனக் குளிருமாறு தாம் மேற்பூண்ட அறப் பெருஞ் செயலை மங்களமாகச் செய்து முடித்தார்கள். இவ்வரிய தர்மத்தை மிகமகிழ்வோடு விடாமுயற்சியுடன் செய்து முடித்த திருவாளர் வயி. வ. இலக்குமணன் செட்டியா ரவர்களும் அவர்கள் அருமைச் சகோதரர் திருவாளர் வயி. வ. வடுகநாதஞ் செட்டியா ரவர்களும் அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த பிற வெல்லோரும் இவ்வுலகில் சீருஞ் சிறப்பும் பெற்று பன்னெடுங்காலம் நல்வாழ்வு வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

உண்மை யுரைப்போன்.

### சருகணியில் தபால் வசதி.

இத் தபால் ஆபீசிற் குட்பட்ட கிராமங்கள் எ௯. இதில் வசிக்கிற ஜனங்கட்கு இவ் வாபீசால் அதிக நன்மை இல்லை. ஏனெனில், இவ்வாபீஸ் பிராஞ்சாபீசா யிருப்பதாலும், தந்தி முதலியன யில்லாததாலுமே. இது பற்றி இரண்டு வருடங்கட்கு முன்னும் அதன் பின்னரும் பல மகஜர்கள் டைரக்டர் ஜெனரல் அவர்கள், போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் அவர்கள், சூப்ரிண் டெண்டெண்ட் அவர்கள், இன்ஸ்பெக்டர் அவர்கள் ஆகிய நால்வருக்கும் எழுதிப் போயின. பிறகு துரை அவர்கள்கருணைகூர்ந்து இன்சூரன்ஸுக்கு ஆர்டர் செய்தார்கள். இந்த ஆர்டர்வந்து இரண்டு வருடமாகியும், அநேகம் ஜனங்கட்குத் தெரியா திருப்பதால், இன்சூரும் ஜாஸ்தி செய்யப்படவில்லை. முன் எழுதிய மகஜர்களுக்குப் போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் அவர்கள் பதில் எழுதி யிருப்பதில் சருகணிப் போஸ்டாபீஸ் சப்ஆபீஸ் ஆக்குவதற்கு அவ் வாபீசிற் போதிய வரும்படியில்லை யென்றும், ஆதலால் மனுதார்கள் கியாரண்டி கொடுப்பார்களா வென்றும் கேட்டார்கள். அதற்கான பதிலும் எழுதப்பட்டிருக்கிறது. துரை அவர்கள் கருணை கூர்ந்து கூடிய விரைவில் சப் ஆபீசாக ஆர்டர் செய்து பொது ஜனங்கட்கு நன்மையைச் செய்து வைப்பார்களென்று நம்புகிறேன். இது பற்றியும் இன்சூரன்ஸ் வசதி ஏற்பட்டிருப்பது பற்றியும் இவ் வாபீசைச் சேர்ந்த ஊர்களில் வசிப்பவர்கட்குத் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

ச. ராமநாதன்.

### இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்.

நாளிது வைகாசிமதி பதினொன்றாநாள் ஞாயிற்றுக்கிழமை மாலை ஐந்துமணிக்கு ஓர் கூட்டம் கூடிற்று. கடவுள் வாழ்த்துக் கூறப்பெற்று திரு. முருகேச முதலியா ரவர்கள் அவைத் தலைமை வகிக்க "அன்புச் சுவாமிகள்" என வழங்கப் பெறும் சிவநேச சுவாமிநாத பண்டிதரவர்கள் "அன்பே சிவம்" எனும் அரிய விடயத்தை அழகுற உபந்யசித்தார்கள். அவைத் தலைவரவர்கள் முடிவுரை கூற வந்தனங் கூறப்பெற்று சபை எட்டேகால் மணிக்கு இனிது நிறைவெய்தியது.

ஆ. பழ. சொக்கலிங்கன்
காரியதரிசி.



## கதைப் பகுதி

### இராஜமல்லிகை அல்லது திருடர் மகாநாடு.

பி. ஸ்ரீ. ஆச்சாரியார்.

(முன் தொடர்ச்சி.)

காதலர்களது காதற்கதை ஒவ்வொரு அதிகாரமாக வளர்ந்தது; கள்வர் தலைவனுக்கும் எட்டி விட்டது. அவன் தன் செல்வப் புதல்வியின் போக்கு வரவுகளை இரகசியமாகக் கவனிக்கத் தொடங்கினன். சாரற் காலத்தில் திருக்குற்றாலம் புதிய உயிர்பெற்றுத் திகழ்ந்தது. காட்டுப் பறவைகள் மரங்கள் தோறும் வீற்றிருந்து இனிமையாகப் பாடி மகிழ்ந்தன. மலர்கள் தோறும் மதுவும் மகரந்தமும் உண்டு வண்டுகள் ரீங்காரம் செய்தன. குன்றுகளெல்லாம் குயில்கள் கூவின. காடுகளின் பசுமையும் பொலிவும் செழுமையும் சிறப்பும் கள்வர் உள்ளத்தையும் வசீகரித்துவிட்டன.

நட்ட நடு நிசி. வன தேவதைகளும் துயில் கொள்ளும் நள்ளிரவு. தளவாய் திடீரென்றுவிழித்துக்கொண்டான். தான் கண்ட காட்சி கனவோ என்று கவன்றான். உடனே மஞ்சத்தி னின்றும் எழுந்து நின்றான். ஒரு நிமிஷம் ஆலோசித்தான். அடிக்கடி தான் காதலியைச் சந்திக்கும் நீரோடைக் கருகே சென்றான். வழக்கமாகத்தான் வாசிக்கும் புல்லாங்குழலை மடியினின்றும் எடுத்தான். ஜகன் மோகனனை பாலகோபாலனைப்போல் அகக் காதலோடு பண்பாடிக் குழலூதினன். கண்ணனது குழலின்பம் இராதையைக் கூவியழைத்தது போல், தளவாய் உளமுருகிப் பாடிய காதற் பாட்டும் குழலின் வாயிலாகப் பொங்கி எழுந்து பொய்யுறக்கம் கொண்டிருந்த இராஜமல்லிகையை வாவென்று அழைத்தது. அவள் எழுந்து படுக்கையில் உட்கார்ந்தாள். அமுத கீத வடிவமாய் வந்த காதல் வெள்ளம் அவளது உள்ளத்தைக் கவர்ந்து சென்றது.

மெதுவாகச் சந்தடி யின்றி இராஜமல்லிகை வீட்டினின்றும் வெளிப்பட்டாள். தனக்கு முன் ஓடும் உள்ளத்தைப் பிடிப்பவள் போல விரைந்து சென்றாள். ஓடைக் கரையில் புல்லாங்குழலும் கையுமாய் இசையோடு லயித்துத் தன்னை மறந்திருந்த காதலனைக் கண்ணுற்றாள். மெதுவாய் முதுகுப் பக்கமாகச் சென்று அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு தன் சின்னஞ்சிறு தளிர்க்கைகளால் கண்களை மறைத்தாள்.

அவனும் திரும்பித் தழுவிக் காதலியின் முகம் நோக்கி, "கண்மணீ! நீயும் நானும் இக் கள்வர் கூட்டத்தி னின்றும் தப்பி, தேசாந்திரம் சென்று பிழைப்போம். அப்பொழுதன்றோ நாம் வெளிப்படையாக இல்லறம் நடாத்தி யின்புற்று வாழலாம்!" என்று சொன்னான்.

பெண்கொடியும் தன் காதலனை நோக்கிக் கண்ணீர் விட்டுக் கரைந்தாள். "என் அன்பே! நானோ கூண்டில் அடைபட்ட கிளிப்பிள்ளை; எனக்குச் சுதந்தரமேது? வாழ்வேது? இல்லறமேது? இன்பமேது? மரணமே எனக்கு விதித்த விதி. எனக்காக நீ வருந்தவேண்டாம்" என்று தேம்பித் தேம்பி யழுதாள்.

கள்வர் காவலன் சிறிது தூரத்தில் மறைந்திருந்து இவர்களை யுற்று நோக்கிக்கொண்டிருந்தான். இவர்கள் அதனை யறிந்து கொள்ளவில்லை.

இராஜமல்லிகை தன் படுக்கைக்குத் திரும்பி வந்ததும் இருளப்பன் அவள் கண்முன் திடீரென்று தோன்றினன். விகாரமான குரலில் "நான் உன்னை மகளாக வளர்த்தேன். நீ எனக்குக் கூற்றாக முளைத்தாய். நமது சாதி யாசாரம் போய்விட்டது. கள்ளர் குலத்தின் கௌரவம் என் காலத்தில் அழிந்துவிட்டது. பாப்பாரச் சாதிக்கும் தேவேந்திர குலத்து மறவர்களுக்கும் என்ன சம்பந்தம்? அவன் மந்திரித்துவிட்டான். நீ மாயவலையில் சிக்கி மயங்கிவிட்டாய். நாளை அவன் படும் பாட்டைப் பார்" என்று பிரசங்கித்துவிட்டு இருளப்பன் அவ் இருளில் எங்கேயோ மறைந்து சென்றான்.

மறுநாள் கள்வர் மகாநாடு இருளப்பசாமி தலைமையில் நடைபெற்றது. தளவாயின் குற்றம் பகிரங்கமாக விசாரணையாயிற்று. அவன் குற்றத்தை ஒப்புக்கொண்டான். "அவள் ஒன்றும் அறியாள். நானே கன்னிகையின் உள்ளத்தைக் களவாடிய கள்வன் எனக்குத் தக்க தண்டனை விதிக்க வேண்டும்" என்று தளவாய் கம்பீரமாகக் கூறினன். கள்வர்கள் அவனது வீர மொழிகளைச் செவியுற்று பிரமித்துப்போனார்கள். 'சபாஷ்! சபாஷ்!' என்று நாற்புறங்களிலும் ஆரவாரம் எழுந்தது. முடிவில் தளவாய் இராஜமல்லிகையின் கைகளாலேயே மாண மடைய வேண்டுமென்று ஒரு விசித்திரமான தண்டனை அவனுக்கு விதிக்கப்பட்டது. உடனே அவளைச் சிங்காரித்துச் சபைக்கு அழைத்து வந்தார்கள். தளவாயின் கைகால்கள் கட்டப்பட்டிருந்தன. அவள் கையில் ஒரு பட்டாக் கத்தியைக் கொடுத்தார்கள். அக்கத்தியால் ஒரே குத்தாகத் தளவாயின் வஞ்ச நெஞ்சில் குத்திவிட வேண்டும் என்று கட்டளை பிறந்தது.

இராஜமல்லிகை அக்கள்வர் கூட்டத்தை நன்கு அறிவாள். எமதண்டனை தவறுவதாயினும் இருளப்ப மன்னன் ஆணை தவறுவதில்லை யென்பதும் அவள் நன்கு அறிந்த விஷயம். ஒன்றும் பேசாமலே கத்தியைக் கையி லேந்தினன். அதனை யுற்று நோக்கினன். காதலன் கட்டுண்டிருந்த இடத்திற்கு அன்னம்போல் அடியிட்டுச் சென்றாள். திருடர்கள் விலகி நின்று வேடிக்கை பார்த்தார்கள். கடைசியாகத் தான் காதலனோடு கொஞ்ச நேரமாவது சொல்லாடிக்கொள்ள வேண்டுமென்ற வரம் மாத்திரம் தன் தந்தையிடம் முன்னரே பெற்றிருந்தாள். அவள் உள்ளத்தில் ஏதோ ஒரு உறுதியான தீர்மானம் செய்துகொண்டவள் போலத் தோன்றினள். தளவாய் அவளை நோக்கினன். அவன் முகத்தில் கவலை யென்பது கொஞ்சமு மில்லை; அவன் முகத்திலும் மரண பயம் ஒரு சிறிதும் இல்லை. ஆனால் காதலனை அணுகியதும் அவள் உடம்பு கடுங்காற்றில் நடுங்கும் பூங்கொடிபோல நடு நடுங்கிற்று; அவள் உள்ளமும் ஒருவழி நில்லாது ஊசலாடத் தொடங்கியது. தளவாய் மெதுவான குரலில் சொன்னான். "அன்பே! வருந்த வேண்டாம். என்ன பேறு பெற்றேன்? உன் இளந் தளிர்க்கைகளால் இறக்கும் பாக்கியமே பாக்கியம். எனக்கு அப்பேற்றை விரைந்தளிக்க வேண்டும். இம்மையிலும் மறுமையிலும் என்னை வாழ்விக்கும் வாழ்வு நீயே!" என்றான். காதலி அழுது புலம்பினள். காதலன் பலவிதமாகச் சமாதானம் கூறினன். அவள் இன்னும் அதிகமாக அழுது கதறினள். இருளப்பன் கண்கள் கடுஞ் சினத்தால் சிவந்தன. கள்வர்கள் 'கொல்! கொல்!' என்று கூக்குரலிட்டார்கள்; பயமுறுத்தினார்கள். இராஜமல்லிகை காதலன் செவியில் கூறினள்:- "வேறு யோசனை வேண்டாம்; நான் சொல்வதைக் கேள். உன் கட்டை யறுத்தெறிகின்றேன். என் கட்டையும் இதோ அறுத்துக் கொள்ளப் போகிறேன். நீ மகா வீரன். இக் கத்தியைக் கைக்கொண்டு இக்கால தூதர்கள் கையிலிருந்து தப்பித்துக் கொள்ள முயலவேண்டும். அவர்களோ, இப்போது அஜாக்கிரதையாய் ஆயுத மற்றவர்களா யிருக்கிறார்கள். இதுவே தக்க தருணம். தப்பித்

துக்கொள், தப்பித்துக்கொள். அடியாளை மாத்திரம்... ... ... ..."என்று சொல்ல வந்ததை முடிக்க மாட்டாமல் தேம்பித்தேம்பி யழுதாள். அவனுக்கு ஒன்றும் நன்றாக விளங்கவில்லை. விழித்துக்கொண்டே கனவு காண்பவனைப்போல மெய்மறந்திருந்தான். காதலன் ஒருவாறு அறிவுற்று விழித்துக் கொள்ளுமுன், அவள் பளிச்சென்று அவன் காலிலும் கையிலும் கட்டியிருந்த வடக் கயிறுகளைக் கத்தியால் அறுத்தெறிந்தாள். அவன்அக்கத்தியைக்கைப்பற்ற எத்தனிக்கு முன், தன் மார்பில் அவள் அதனைச் செலுத்திவிட்டாள். ஒரு கணம் 'ஐயோ! ஐயோ!' என்ற கூக்குரல். மறுகணம் இராஜமல்லிகை மாண்டு விழுந்தாள். இன்னமொரு கணத்தில் தளவாயும் அக்கத்தியால் தன்னைக் குத்திக்கொண்டான்.

கள்வர் தலைவன் திடுக்கிட்டுப் போனான். எதிர் பாராத சம்பவங்களால் கள்வர்களும் பயந்து செயல் மறந்து ஸ்தம்பித்து நின்றார்கள். ஒருவரும் ஒன்றும் பேசவில்லை; பேசத் துணியவுமில்லை. மறுபடியும் மகாநாடு கூடியது. இருளப்பன் இராஜ பதவியைத் தன் தோழனாகிய தொட்டியச்சின்னானுக்கு அளித்தான். இராஜமல்லிகை யில்லாத இடத்தில் தனக்கு இனி வாழ்வில்லை யென்று உறுதியாகச் சொன்னான். எண்ணிறந்த கொள்ளைகளில் தனக்குத் தன் கைப்படைபோல் துணை செய்த கூட்டாளிகளுக் கெல்லாம் தன் நன்றியறிதலைச் செலுத்தினான். புதிய தலைவனிடம் விடை பெற்றுக்கொண்டான். இருவரும் அழுதார்கள். ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டார்கள். அக் கள்வர்க ளெல்லாம் பிறர் அழுவதையே பார்த்தவர்கள்; தாங்கள் அழுதறியாதவர்கள். இப்பொழுது எல்லோரும் அழுதார்கள், தொழுதார்கள். இருளப்பன் அவர்களது இராஜபக்தியை மெச்சினான். அவர்களை நோக்கி "இப்பாப்பான் உண்மையான அன்பன்; கள்ளம் கபடறியாத சூரன். இவனையும் என் பெண்ணையும் ஒரே குழியில் புதைத்து விடுங்கள்!" என்று வேண்டினான். காதலர் இருவரையும் புதைத்து மூடிய குழிக்குமேல் கள்வர்கள் ஒரு வீரக்கல் நட்டார்கள். கள்வர்கோன் அக் கல்மீது கண்ணீர் மஞ்சனஞ் செய்தான். நிலமிசை விழுந்து புரண்டான். நெடுமூச்செறிந்தான். எழுந்து நின்றான்.

"சாமீ! இருளப்ப மகாராசா! எசமான் இப்படி என் புலம்ப வேணும்? நாங்க ளிருக்கும்போது எசமானுக்கு என்ன குறை?" என்று கள்வர்களில் சிலர் இருளப்பனது கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு சொன்னார்கள். அவன் காலை யுதறினான். அவர்கள் உதை பந்துகள் போல உருண்டு விழுந்தார்கள். "யாரடா இருளப்பன்? நானா இருளப்பன்? நான் தளவாய். நான் சிங்கக்குட்டி ராமன்" என்று பழைய தலைவன் நெற நெறவென்று பற்களைக் கடித்தான். அவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். "செத்தும் தெய்வமா யிருந்து காப்பாத்த வேணும் சாமி! ஏழைகளுக்கு இரங்க வேணும் சாமி! கள்ளர் செய்த குற்றங்களை எல்லாம் மன்னிக்க வேணும் சாமி!" என்று அவர்கள் ஒரு முகமாக நின்று ஒரே குரலில் பிரார்த்தித்தார்கள்.

இருளப்பன் கள்வர்களை முகம் நோக்கி வேறொன்றும் அவர்களுக்குச்சொல்லவில்லை. அவன் அகத்தியமலையை நோக்கி விரைந்து சென்றான். பலர் 'சாமி, சாமி' என்று கத்திக்கொண்டு அவன் பின்னே சென்றார்கள். இருளப்பன் ஓடத் தொடங்கினான், கள்வர்களில் சிலர் அவனைத் தொடர்ந்து ஓடினார்கள். ஆனால் அவன் ஒரு வழி பிடித்துச் செல்ல வில்லை. பாறையிலிருந்து பாறைக்குத் தாவினான். பள்ளத்தாக்குகளில் பாய்ந்து குதித்தான். காட்டுக் கொடிகளைப் பற்றிக் கொண்டு செங்குத்தாயிருந்த கற்பாறைகளிலும் மலைச் சிகரங்களிலும் அலட்சியமாக ஏறினான். அவனைத் தொடர்ந்து சென்றவர்களில் சிற்சிலர் மண்டை யுடைந்து மாண்டார்கள். எஞ்சியவர், தலைவனது சாகசத்தைக் கண்டு வியந்து பயந்து பார்த்துக் கொண்டு நின்று விட்டார்கள். அவர்கள் கண்ணுக் கெட்டிய தூரம் வரை அவனைப் பார்த்த வண்ணமாகவே நின்றார்கள். மலைக் குறவரும் மருளும் நிர்மானுஷ்யமான அகத்தியர் குன்றை நோக்கி ஓடிய கள்வர்காவலன், காட்டு மிருகங்களும் புகுந்து செல்வதற்கு அஞ்சி விலகியோடும் அடர்ந்த அரணியத்தில் எங்கேயோ மாயமாய் மறைந்து போனான்.

ஆனந்தமான காலை வேளை. கண்ணையும் கருத்தையும் ஒருமிக்கக் கவர்ந்து பிணிக்கும் அற்புத மலைச் சாரல். சுமார் ௨.௦௦ அடி உயரத்திருந்து ஓடிவரும் சித்திர கங்கை செருக்கோடு குமுறிப் பள்ளத்தில் குப்புறப் பாய்ந்து குதிக்கின்றது. காலை யிள வெயிலில் களித்து வீழும் அவ் அழகிய அருவிநீர் பளிங்குபோலப் பளபள வென்று ஒளி வீசுகின்றது. காலை மென் காற்று, காட்டிலுள்ள நறு மலர்களைக் கட்டித் தழுவி முத்தமிட்டு, அதிர்ந்து விழும் அருவிப் பெருக்கில் மொத்துண்டு மகிழ் வெய்தி மலைப் புழை வழியே இனிமையாகத் தவழ்ந்து வருகின்றது. நுண்ணிய வீழ்நீர்த் துளிகள் இன்பமயமான அமுத மழை பொழிகின்றன. நீர் அருவியின்மீது பச்சை போர்த்த மலை, நீலமுடி சூடி நீல வானமாகிய விதானத்தின் கீழ் வீற்றிருந்து தனியாசு செலுத்துகின்றது. மேலே நிர்மலமான நீலமணி விதானம்; கீழே பாவி அலைகொழித் திழியும் பச்சை மணிக்கடல்; இடையே கடைந்தெடுத்த பளிங்குமணிபோன்ற அருவி நீர் வீழ்ச்சி. இன்பமயமான காலை யிளங் கதிர்கள் விரைந்து வந்து மலை யுச்சியிலும் நீர்வீழ்ச்சியிலும் கீழே பெருகி யிழியும் பச்சைக் கடலிலும் விழுந்து விளையாடுகின்றன.

தேனருவி யென்று இந்நாளில் பிரசித்தியாகக் கூறப்படும் இந் நீர் வீழ்ச்சியின் கீழ் அஞ்சா நெஞ்சர்களான கள்வர்கள் மூழ்கி நீராடுகின்றனர். நீராடி முடிந்தபின், அவர்கள் ஒவ்வொருவராக, அருவியின் அருகேயுள்ள ஒரு காட்டகத்தே சென்று மறைகின்றனர். காலை வேளையிலும் அக்காடு இருளின் உறைவிடம் போல இருண்டு கிடக்கின்றது. அக் காட்டிலே ஒரு கருங்கற் பாறை கொடிய ராக்ஷசப் பாம்பு ஒன்று படம் விரித்துச் சீறுவது போல, விரிந்து கவிந்து நிற்கின்றது. அப்பாறையுள் மலைப் பாம்பின் பகுவாய்போன்ற பயங்கரமான குகையொன்று காணப்படுகின்றது. அக் குகைக்கு அருகே பல தீவர்த்திகள் ஒளி செய்கின்றன. அவ்விடத்திலே தான் தளபதி சுப்பராமய்யாவின் பிரேதமும் அவனது ஆருயிர்க் காதலியின் பிரேதமும் அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றன.

காதலர் குழிமீது நடப்பெற்ற ஒரு கல்லில் இரண்டு உருவங்கள் அமைக்கப்பெற்றிருந்தன. ஒன்று தளவாயின் வீர வடிவம்; மற்ற வடிவம் கட்டழகியாகிய இராஜமல்லிகையின் இன்ப வடிவம். கள்வர்களது புதிய தலைவனான சின்னான் தேனருவியினின்றும் கொணர்ந்த தீர்த்தத்தால் காதலர் சிலையைக் கழுவினான். பிறகு கள்வர் அச் சிலையை இராஜமல்லிகை மலர்களால் அழகாக அலங்கரித்தார்கள். சிலர் உவகை மிகுதியால் ஆடினார்கள். வேறு சிலர், செவிடுபடக் குமுறும் அருவியோசையையும் அடக்கியெழுந்த உச்ஸ்வரத்தில், வீர சூர சிகாமணியான் தளவாயின் புகழை யமைத்துப் பள்ளுப் பாடினார்கள். இன்னும் சிலர் இருளப்பசாமியின் அருமந்த செல்வமாகிய இராஜமல்லிகையின் பேரழகைத்தேம் பாங்கில் இசைத்துப் பாடினார்கள்.

மலைக்குறவன் மாரியப்பன் கல்லுக்குப் பூசனை புரிந்தான். கள்வர்கள் உற்சாகமாக விழா வெடுத்தார்கள். 'நரிக்குக் கலியாணம்; நண்டுக்குப் பிராணாவஸ்தை' யென்பது போலப் பல கள்வர்கள் தங்கள் உற்சாக மிகுதியால் ஆடுகளையும் கோழிகளையும் பலிகொடுக்க முயன்றார்கள்.

ஆனால், மாரியப்பன் 'ஹா ஹா ஹா!' வென்று அலறினான். அக் கூச்சல் குகையிலும் பாறைகளிலும் மோதி எதிரொலி கொண்டு கோஷித்தது. அந்த ஆவேசக் குரலால் காட்டு மிருகங்களும் காட்டுப் பறவைகளும் பயந்தோடின. அச்சமே யறியாத கள்வர் நெஞ்சமும் அஞ்சி நடுங்கிவிட்டது. குறவனும்,

"பாப்பாரத் தெய்வமடா
பலியாது பலிகளுக்கே!"

என்று கோடை யிடிபோல முழக்கினான். கள்வர்களும் 'அடிமைகள் அப்படியே செய்வாரகள்' என்று பிரமாணம் செய்து கொடுத்தார்கள். அப்படியே அவர்கள் உயிர்ப்பலி கொடாது மலர்ப்பலி வகுத்தார்கள்; பான்கம் வைத்துப் பாற்பொங்க லிட்டார்கள். காதலனும் காதலியும் ஊனுணவு கொள்ளாத தெய்வங்களாக விளங்கிக் கள்வர்களுக்குக் காட்சி யளித்தார்கள்.

சொ. முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப்பிரசுரிக்கப்பெற்றது.



# இரண்டாவது
# மலேயா தனவைசியர் மகாநாடு.

—:o:—



(ஈப்போ நகரமண்டபம்.)

குரோதன ஞூ வைகாசிமீ உ௯யன்று ஈப்போ நகர மண்டபத்தில் கூடிய இரண்டாவதுமலேயா தனவைசியர் மகாநாட்டில்

வரவேற்புக் கழகத் தலைவர்

ஸ்ரீமான்

மே. சே. முத்தையா செட்டியார்

அவர்களின்

வரவேற்புப் பிரசங்கம் வருமாறு:

அன்பு கெழுமிய சகோதரர்களே! பெரியோர்களே! பிரதிநிதிகளே!

இம்மலேயா தனவைசியர் இரண்டாவது மகாநாட்டின் வரவேற்புக் கூட்டத்தாருக்காக எனது வந்தனத்தை யளித்து உங்களை வரவேற்கின்றேன். இப்பணி செய்யப் போதிய வல்லமையற்றவனாக விருந்தாலும் கடமையை நினைத்து ஏற்றுக்கொண்டேன். இரண்டாவது மகாநாடும் இவ்வூரிலேயே நடைபெறுவதை நினைந்து சந்தோஷிக்கின்றேன். இம்மகாநாடு எல்லா வழியாலும் நன்மையாக நடைபெறுமாறு கடவுளைப் பிரார்த்திக்கின்றேன். நமது ஜாதியை உன்னத நிலைமைக்குக்கொண்டு வரவேண்டுமென்று எழுந்த இயக்கமானது பரவி வருங்கால் முதன் முதலாக இவ்வூரிலேயே ஒரு சங்கம் ஏற்பட்டது. அதன் பின்னர் மகாநாடு ஒன்றைக் கூட்ட வேண்டுமென்று யோஜித்து இவ்வூரிலேயே கூட்டப் பெற்றது. இப்போது இரண்டாவது மகாநாடும் இங்கேயே நடைபெறுகின்றது. இம் மலேயா நாட்டில் நமது ஜாதியத் தொண்டில் இவ்வூரே முதன்மையாக நிற்பதற்காகப் பெருமை யடைகின்றேன். இம் மகாநாட்டிற்குத் தலைமை வகிக்க இசைந்துள்ள சிங்கப்பூர் ஸ்ரீமாந் சுப. க. அ. வைரவன் செட்டியார் அவர்கள் நமது ஜாதி முன்னேற்றமடைந்து கௌரவமாக வாழ வேண்டுமென்பதில் மிக ஆர்வங் கொண்டவர்களாதலால், இப்போது நாம் செய்யவேண்டிய முக்கிய விஷயங்களை உங்கட்குச் சொல்வார்கள். ஆயினும் எனது ஆசை மேலீட்டால் நானும் சில சொல்லுகின்றேன். இம்மலாயா நாட்டில் நம்மவர்கள் பெரும்பாலும் பிரிட்டிஷ் ஆளுகைக்குட்பட்ட சுதேச ராஜ்யங்களிலேயே தொழில் புரிந்து வருகின்றனர். அச் சுதேச ராஜ்யங்களுள் முதன்மையாக விளங்கும் இப் பேரா ராஜ்யத்தின் மாட்சிமை தங்கிய சுல்தான் அவர்கள் இங்கிலாந்துக்குச் சென்றபொழுது விருந்துண்ட பின் நம்மைப் பற்றியும் சில பேசியிருக்கின்றார். அதில் இந்நாட்டிற்குத் தேவை யில்லாத சமூகத்தாருள் நாமும் ஒருவரென்றும் தாம் இந்நாட்டிற்குத் திரும்பி வந்ததும் நம்மைப் பற்றி ஒரு சட்ட மியற்றப் போவதாகவும் சொன்னார். ஆனால் இந்நாட்டு அரசாங்க உத்தியோகஸ்தர்களில் முக்கியமானவர்கள், நம்மவர்களால்தான் இந்நாடு சீர்பெற்றதென்றும் சிறிய கடைகாரர் முதல் பெரிய வியாபாரிகள் வரை எல்லாருக்கும் தகுதிக்குத் தக்கவாறு கடன் கொடுத்துத் தொழிலை முன்னுக்குக் கொண்டு வந்திருக்கிறோமென்றும் சொல்லி யிருக்கிறார்கள். இந்நாட்டில் நடைபெறும் எல்லா வியாபாரங்களும் ஏனைய ஜாதிக்காரர்களால் நடைபெற்றாலும் இலாப நஷ்டங்கள் நம்மைப் பொறுத்ததாகவே யிருக்கின்றன. ஆகவே நாம் இந்நாட்டை விட்டுப்போய்விட்டால் வியாபாரங்கள் குன்றிவிடு மென்பதில் தடையில்லை. மாட்சிமை தங்கிய சுல்தான் அவர்கள் இதை உணர்ந் திருப்பார்களென்றே நம்புகிறேன். அவர்கள் உத்தியோக முறையில் இங்கிலாந்தில் பேசவில்லை யாதலால் நாம் அதைப்பற்றிக் கவலை யடையவேண்டுவதில்லை. என்றாலும் நம் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளவும் உண்மையை எடுத்துக் காட்டவும் இம்மகாநாட்டில் ஒரு தீர்மானத்தைச் செய்யுமாறு உங்களை வேண்டுகிறேன். இந்த இருபதாம் நூற்றாண்டிலும் நாம் பழைய கொள்கைகளையே பிடித்துக் கொண்டு நிற்க முடியுமாவென்பதை யோஜிக்கவேண்டும். முன் காலத்தில் நாம் எல்லாரும் பண்டமாற்று முறையில் வியாபாரம் செய்துவந்தோம். அப்பால் அதிகமான பணம் சேரவே வட்டித் தொழிலை ஆரம்பித்தோம். இப்போது அதனை எல்லாரும் அவ்வளவாக விரும்பவில்லை. இலாபமும் அதிகமாகக் கிடைக்கவில்லை. சீனர்களில் அநேகர் இந்தத் தொழிலைச்செய்ய ஆரம்பித்து விட்டபடியால் நம்மில் ஒரு சிலர் வேறு துறையில் இறங்கவேண்டுவது அவசியமாகிறது. கைத்தொழில்கள் செய்வதற்கு நவீன முறைப்படி நாம் படிக்கவில்லையாகையால் வியாபாரஞ் செய்வதில் நாம் இறங்கவேண்டும். ஒருவர் ஒரு வியாபாரத்தைச் செய்யஆரம்பித்தவுடனேசிறிது ஊதியங்கிடைப்பதை யறிந்து அதேதெருவில் அதே வியாபாரத்தை மற்றொருவருஞ் செய்ய ஆரம்பித்து விடுதல் கூடாது. ஒருவர் செய்ததைப் பின்பற்றுவதில் நாம் கெட்டிக்காரர்களாதலால் இதனை வற்புறுத்திச் சொல்லவேண்டி யிருக்கிறது. ஒருவர் பின் ஒருவராக நாம் சென்றதாலேயே இப்போது இந்நாட்டிலுள்ள ரப்பர் தோட்டங்களில் பெரும்பாகம் நம் கையில் வந்திருக்கிறது. பெரிய வியாபாரங்கள் செய்வதற்குப் பலரை

யும் பங்காளிகளாகக்கொண்ட கூட்டுக் கம்பெனிகளே ஏற்ற முறையாகும். ஆனால் மேல்நாட்டு முறைப்படி பதிவு செய்யப்பட்ட முறையில் நடத்துவதற்கு நாம் இப்போது பழக்கமில்லாதவர்களாக விருப்பதால் 10, 20 பெயர்களாகச் சேர்ந்து ஆரம்பித்தல் நலம். இதில் மானேஜராக வுள்ளவரை நாம் நம்ப வேண்டும். நாமும் பங்குக்காரர் தானே! கம்பெனியின் வேலைக்காரர்களை நாமும் ஏன் அதிகாரஞ் செய்யக் கூடாது? கம்பெனிச்செலவில் உள்ள மோட்டார் நமது உபயோகத்துக்கும் ஏன் வரக்கூடாது? என்று எண்ணுதல் கூடாது. இதில் சகிப்புத்தன்மை வேண்டும். இவ்விஷயத்தில் நாம் மேல் நாட்டாரைப் பின்பற்ற வேண்டும். அவர்கள் ஐரோப்பாவில் கம்பெனியை ஸ்தாபித்துவிட்டுப் பங்காளிகள் எல்லாரும் ஆங்கிருக்க இங்கு எவ்வளவு ஒழுங்காகக் கம்பெனியை நடத்துகிறார்கள். நாமோ அப்படியில்லை. காரணம் நம்மிடம் நம்பிக்கை இல்லாமையே யாகும். ஆனால் நமது ஜாதியில் தற்கால இளைஞர்கள் வியாபாரத்தில் ஊக்கத்தைச் செலுத்தி வருவதை யறிந்து நாம் சந்தோஷப்படுவோம். அவர்களுடைய வியாபாரத்திற்கும் உதவி செய்வோம். கொஞ்சம் அதிகமான விலையாக விருந்தாலும் அதனையே ஆதரிப்போம். இத்தகைய உணர்ச்சி மேல்நாட்டாருக்கு இருப்பதாலேயே உலக முழுதும் அவர்களது வியாபாரம் சிறந்து விளங்குகிறது. இனி சமய சம்பந்தமாகச் சில சொல்ல விழைகின்றேன். நாம் ஒப்புயர்வற்ற நாட்டிற்பிறந்து உயரிய சைவ சமயத்தைக் கைக்கொண்டு ஒழுகி வருகின்றோம். எந்நாட்டிற்குச் சென்றாலும் ஈஸ்வரனை மறக்காமல் ஆங்காங்கு கோயில்கள் கட்டுவித்து உத்ஸவாதிகளை நடாத்துகின்றோம். ஆனால் இந்நாட்டில் ஏராளமான பொருள்களைச் செலவழித்துப் பெரிய சிகரங்களை எழுப்பிக்கட்ட ஆரம்பித்திருக்கின்றோம். இப்படிச் செய்யவேண்டுவது அவசியமாவென்பதை யோஜிக்க வேண்டும். சிறு குடிசையாக விருந்தாலும் உண்மையோடு நாம் வழிபட்டால் கடவுள் அதில் வீற்றிருப்பார். நாம் டம்பத்திற்காக இந்நாட்டிலும் கோயில்கள் கட்ட வேண்டுவது அவசியமில்லை என்று எண்ணுகின்றேன். இப்படிச் சொல்வதால் கோயில்கள் கட்டவேண்டாமென்பது கருத்தல்ல. ஏராளமான பணத்தைச் செலவு செய்யவேண்டாமென்பதே. நம்மவர் இருக்கும் ஊர்கள்தோறும் கோயில்கள் இருக்கவேண்டுமென்பதைப் பெரிதும் வற்புறுத்துகிறேன். கோயில்கள் இல்லாத ஊர்களில் அடக்கமான கோயில்கள் சொற்பச் செலவில் கட்டினால் போதுமானது. ஏராளமான தனத்தைச் செலவு செய்து திருப்பணி செய்வதைக் காட்டிலும் அவ் இறைவனை வழிபட ஏற்ற சாதனங்களை அமைத்துக்கொள்வதற்கு நாம் பாடுபடுவது சாலச்சிறந்ததாகும். இனி இத்திருக்கோயில்களில் நடை பெறும் உத்ஸவங்களைப்பற்றிப் பேசுவதென்றால் வருத்தமாகவே யிருக்கிறது. வைதிக சம்மந்தமாக நடை பெறும் விழாக்களுக்கும் தெருக்கூத்துக்கும் என்ன சம்பந்தம்? ஜனங்கள் கூத்தின்மீது கவனஞ் செலுத்துவார்களே யொழிய இறைவனை நினைப்பதற்கு நேரமுண்டோ? இன்னும் அந்நிய மதஸ்தர்களை அழைப்பித்து மாலையிட்டு உபசரிக்கின்றோம். நமது நாட்டிற் பிறந்து, நமது மததவதை யநுட்டித்து; நமது இறைவன் திருப்பெயரைத்தாங்கி நிற்கும் ஒருவரைத் தீண்டாத ஜாதியாரென்று ஒதுக்கும் நாம் நமக்கு எவ்வித சம்பந்தமும் சமத்துவமும் மத விஷயத்தில் இல்லாத அந்நியரைப் பூட்ஸ் கால்களோடு நமது இறைவன் திருச்சந்நிதிக்கு அழைத்துச் செல்கின்றதை நீக்க முயல வேண்டும். இதைக்கவனத்தில் வைத்துக் காலக்கிரமத்தில் ஒழிக்க முயற்சிப்பீர்களென்று நம்புகிறேன். நாம் இந்த நடத்திவரும் உத்ஸவங்களில் சில இடங்களில் இடும்பன் பூஜை நடை பெறுகின்றது. இதில் ஆடு கோழிகளை அறுத்து நிவேதனஞ்செய்யப் பெறுகின்றது. சைவ சமயிகளாகிய நம்மிடையில் இவ்வழக்கம் ஏற்பட்டது நமது துரதிருஷ்டமே யாகும். விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்துகொண்டு இச்செயல் புரிவது தகுதியோ என்பதைச் சற்று யோஜித்துப் பாருங்கள். இவ் இடும்பன் பூஜை நடக்கும் ஊர்களில் உள்ள அன்பர்களில் சில ஆடு கோழிகளின் கழுத்தை யறுக்காமல் இக்கொலைச் செயலை அடியோடு ஒதுக்கி அன்பர்கட்கு இன்ப மூட்டும் அருள் மயமான இடும்பனுக்குப் பாற்பள்ளயம் போடுவோமென்று எல்லோரையும் இரந்து நின்று வேண்டியும் அறவோர் மனம் புண்படுமாறு ஏனையோர் பிடிவாதமாக உயிர்க் கொலை செய்தே தீர்க்கின்றனர். உயிர்ப்பலியிட்டு இடும்பனை வணங்கா தொழியின் அதனாலேயே இடும்பனுக்குக் கோபம் நேர்ந்து நம்மவர்களுக்குக் கெடுதல் நேர்ந்து விடுமென்று இவர்கள் சொல்வதை எவ்வழியிலும் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. மற்றுஞ் சொல்லுகின்றனர்: க்ஷேம இலாபத்தோடு இருக்க வேண்டுமென்பதற்காகவே இச்செயல் செய்ய வேண்டுவது அவசியமாக விருக்கிறதென்று வற்புறுத்துகின்றனர். ரப்பர் விலை இறக்கத்தால் எத்தனையோ பெயர்களுக்கு இடும்பன் பூஜையில் பலியிடும் ஊர்களிலே சொல்லொணாத் துயரம் ஏற்பட்டிருக்கிறது. இடும்பனுக்குப் பலி யிடுவதால் துன்பம் நிகழாதென்பது உண்மையானால், ஏனோ இந்நாட்டிற்குப் பொதுவாக எல்லோருமே வருந்தும்படியான சிரமம் நேர்ந்தது? அவரவர் விதியின்படி நிகழுமேயன்றிப் பலியிடுவதால் நலன் விளையப் போவதில்லை. இவைகளைப்பற்றி நான் சொல்வதால் ஒரு சிலருக்குச் சிரமமாகத் தோன்றலாம். அவர்களும் என்பேரில் சீற்றங் கொள்ளாமல் விஷயத்தில் சிந்தையைச் செலுத்தித் தர்மவழி நடப்பார்களாக! இப்போது பர்மாவில் சிலவிடங்களில் இக்கொடிய வழக்கம் நிறுத்தப்பட்டு வருகின்றது. இந்நாட்டிலும் சில ஊர்களிலேயே இந்நிகழ்ச்சி நடை பெறுவதால் அதனையுங் கூடிய விரைவில் ஒழித்துவிடுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். சகோதரர்களே! தலைவரவர்களின் முகவுரைப் பிரசங்கத்தைக்கேட்க நீங்கள் ஆவலுள்ளவர்களாக விருப்பீர்களாதலால் எனது உரையை இவ்வளவொடு நிறுத்துகின்றேன். நமது, மகாநாடு உத்ஸவகாலங்களிலேயே நடை பெறுவதால் உங்கட்குத் தனியாக உணவு வசதிகள் ஏற்பாடு செய்யவேண்டுவது அவசிய மில்லாமலிருக்கிறது. மற்ற வசதிகளும் சொற்பமாகவே செய்யப்பட்டிருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்வீர்களென்று நம்புகிறேன். இன்னும் ஒரு முறை எனது வந்தனத்தை உங்கட்கு அளிக்கின்றேன். இப்பதவியை எனக்களித்த வரவேற்புக்கழகத்தாருக்கு எனது நன்றியைத் தெரிவித்து இம்மகாநாடு வெற்றியோடு நிறைவேறுமாறு கடவுளைப் பிரார்த்திக்கிறேன். சுபம்,

## மகாநாட்டுத் தலைவரின் உபந்யாசம்.

ஷை மகாநாட்டில் தலைமை வகித்த ஸ்ரீமாந் சுப. க. அ. வைரவன் செட்டியாரவர்களின் முகவுரைப் பிரசங்கம் வருமாறு:—

அன்பார்ந்த பெரியோர்களே!

சகோதரர்களே!!

இயற்கை யின்பங்களும் செயற்கை யின்பங்களும் செறிந்து திகழும் இந்த ஈப்போ நகரின்கண் நம்மவர் நலன் கருதிக் கண்ட இம் மகாநாடு இரண்டாவது முறை கூடி யிருக்கிறது. அதற்கு என்னைத் தலைவனா யிருக்கும்படி பணித்திருக்கிறீர்கள். அறிவிற் சிறந்த பலர் இருக்கச் சிற்றறிவுடைய என்னைத் தலைவனா யிருக்கும்படி பணித்திருப்பதை யான் சிர மேற்கொண்டு நம் ஜாதிக்குச் செய்யவேண்டிய கடமையை யுன்னி இப்பணியை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். இறை விடாது நின்றிலங்கும் ஈசன் திருவருளாலும் நமது பெருமை பொருந்திய ஜாதியின் வழித் தோன்றலாகிய உங்களின் பேருதவியாலும் ஒல்லும் வகை காரியங்களை நடத்த முயலுகிறேன். அதில் ஏதேனும் குறைக ளிருந்தா லவற்றை விடுத்துக் குணங் கொள்ளுமாறு தயவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அன்பர்களே!

நம்முடைய முதலாவது மகாநாடு கடந்த வருடம் இவ்வூரில் கூட்டப்பெற்று இனிது நடைபெற்றது. அதில் சில தீர்மானங்கள் செய்தோம். நமக்குச் சில அநுகூல மேற்பட்டிருக்கிறது. நாமனைவரும் பூரணமாக உழைத்திருப்போமானால் எதிர்பாராத வெற்றி பெற்றிருப்போம். வேலை செய்த அளவிற்குத் தகுந்த பலன் தானே கிடைக்கும். நாம் இவ்வாறான முறையில் பழகிக்கொண்டு வருகிறோமாகலான் சென்றதற்குக் கொஞ்சமும் வருந்துதல் வேண்டாம். நாமெல்லோரும் இங்கு உத்ஸாகமாகக் கூடி யிருப்பதிலிருந்தே இனி முழு வெற்றி கிடைக்கப் போகிறதென்பதைச் சொல்ல விரும்புகிறேன்.



நம் ஜாதியார் பண்டைநாள் சேர்ந்து வாழ்ந்துவந்த தன்மை யின்று மறைந்து நிற்பதற்கு வருந்தாமலிருக்க முடியவில்லை. ஏதோ ஒருவாறாக காரியங்கள் நடந்து வருகின்றனவே யன்றி, பழய வலிமையும் சௌகர்யமும் பொலிந்து விளங்கவில்லை. நம் முன்னோர்களின் பழக்க வழக்கங்களையும் ஆசார அநுஷ்டானங்களையும், நாம் பற்றுது விட்டதே இந் நிலைக்குக் காரணமாகும். காலப் போக்கிற்கு ஏற்றவாறு பழயனவற்றில் சிலவற்றை கழித்து, அறிஞர் ஒப்பும் புதியனவற்றைப் புகுத்துவதால் ஒரு தோஷமும் நிகழ்ந்து விடாது. ஆனால் அடிப்படையான நோக்கத்தில் பேத மில்லாதபடி கணகாணித்துக் கொள்ளுதல் வேண்டும். ஆகவே ஜாதிக்கு ஆக்கந் தரத்தக்க திருத்தங்களைச் செய்து திடமாய் நடப்பதால் நலனே விளையும். மற்றும்நம் முன்னோர்கள் செயலை நாம் அடிக்கடி நினைவிற்குக் கொண்டுவருவதால் நன்மை பயக்குமென்று நம்புகிறேன். அவர்களிடத்துள்ள ஒற்றுமை எங்கே? உறுதி எங்கே? தைரிய மெங்கே? தந்நல மறுப் பெங்கே? அதை நாம் பெற்றுயர வேண்டாமா? ஒரு பெண்ணின் பொருட்டுப் பலர் உயிர்துறந்த செயல் நமக்கு ஞாபக மிருக்கிறதா? பிறருக்குவந்த துயர்தானே யென்று நம்மனோர் பிணங்கி நின்றனரோ? எத்துயர் யாருக்கு வரினும் அத்துயர் தன் தனக்கு நேர்ந்ததாகக் கருதியன்றோ கருமமாற்றி வந்திருக்கின்றனர்? இதைக்காட்டினும் நமக்குச் சிறந்த எடுத்துக் காட்டு வேறொன்று வேண்டுமோ? இதைத்தானே இக்கால அறிவாளிகளும் மனித தர்மமென் றெடுத்துக் காட்டுகின்றனர். மனிதன் வாழ வேண்டிய முறைப்படி நம் முன்னோர்கள் வாழ்ந்தார்கள் என்பது இதிலிருந்து புலனாகிறது. ஆகவே நாமும் இம் முறையை இறுகப்பற்றி நடக்க முயல்வோமாக. இம் மகாநாடு நம்மவர்களின் நன்மைக்காகவே கூட்டப் பெற்றிருக்கிறதென்பதை யாரும் மறுக்க முடியாததாகும். நமக்கு அசௌகர்யம் தந்துகொண்டிருக்கும் விஷயங்களைச் சீர்திருத்தி நன்மை காணவே இப்பொழுதும் இங்கு கூடி யிருக்கிறோம். இக் கூட்டுறவு நமக்கு புதிதன்று. பண்டைக் காலத்திலேயே நம்மவர் ஒற்றுமையாகக் கூடி, காலத்திற்கேற்றவாறு முன் யோஜனையோடு தீர்மானங்கள் செய்து அநுஷ்டித்திருப்பதாகத் தெரிகிறது. தற்காலக் கூட்ட நடைமுறை இக்கால உலகப் போக்கிற்கு ஒப்ப அமைக்கப்பட்டிருக்கிறதே யன்றி தள்ளத்தக்க ஒன்றல்ல. இலேசான தீர்மானங்களைச் செய்து வரவர நம் சக்தியை அதிகப் படுத்திக்கொண்டு பெரிய விஷயங்களையும் அநுஷ்டானத்திற்குக் கொண்டுவந்து விடுவோம். இன்று நம் ஜாதிய விஷயத்திலுள்ள கஷ்டங்களைச் சிறிது எண்ணிப் பார்த்து வேண்டுவ செய்யவேண்டியதா யிருக்கிறது. நமக்கு வரவாச் செலவினம் மிக விரிந்து விட்டது. வாவிற்குத் தகுந்த செலவென்பதெல்லாம் நம்மை விட்டு நீங்கி வெகு வருடங்களாய்விட்டன. விசேட காலத்து வீண் செலவின் தொல்லைக்காகவே இந் நாட்டில் எத்தனையோ வருடங்கள் வதிந்து துயரை யேற்றேனும் பணம் சம்பாதிக்கவேண்டியதிருக்கிறது. கலியாண விஷயமோ பேசுந்தரத்ததா யில்லை. இதைச் சீர்திருத்துவதென்றால் பணக்காரரும் செல்வாக் குள்ளவர்களும் சேர்ந்து உழைக்க வேண்டும். இவை போன்ற கஷ்டங்களை யொழித்து நலன் செய்வான் வேண்டியே தனவைசிய ஊழியர் சங்கம் காணப்பெற்றது. ஊழியர் சங்கம் செய்த வேலைகள் சாதாரணமாய்ச் சொல்லும் தரத்ததன்று. அரும்பெருஞ் செயல்கள் சங்கம் செய்திருப்பதிற் சந்தேகமில்லை. பல வருடங்களாய்க் காணுதிருந்த தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தைக் கூட்டிற்று. நமக்கு அதிர்ஷ்ட மின்மையினாலேயே கூட்டம் ஒருவாறாக மறைந்தது. இங்கு யாரையும் குற்றம் சொல்லுதல் வேண்டாம். ஊழ்வலி என்பதே பொருந்தும். செய்த முயற்சி உடனே சித்தி பெறவில்லை யென்றால், மனம் சோர்ந்து ஒன்றுஞ் சரியல்ல வென்று குறை சொல்வது அழகல்ல. இஃதின்றேல் இன்னொரு வழி ஏற்படும். தம் ஜாதியை உயர்த்த ஓயா துழைப்பவர்கள் ஒரு கருமத்தைக் கருதாமலே யிருப்பினும் அதுதானே வலிய இறைவனருளால் கைகூடி விடுமென்றார் பிறரும். செய்த முயற்சி கைமேற்பலன் நல்கவில்லையே என்பதற்காக ஊழியர் சங்கத்தார் பின்னடைய மாட்டார்கள். ஜாதிக்கு வேலை செய்வதையே உறு பயனாகக் கொண்டிருக்கும் பலர் சேர்ந்திருப்பதால் எக் காரணங் கொண்டும் தளர மாட்டார்கள். எந்த வழிகளில் முயன்றால் ஜாதி முன்னேற்ற மடையுமோ, அவ் வழிகளிலெல்லாம் இயங்கிவெற்றி பெறுவார்களென்பது திண்ணம். இங்கிருக்கும் நாமும் தாய் நாட்டிலிருக்கும் எல்லோரும் ஜாதிய நன்மை நாடி உழைப்பதென்று முற்படுவோமானால், கூடிய விரைவில் இக் கஷ்டங்க ளெல்லாம் நீங்கி இன்பமாக வாழலாம். இனி இந் நாட்டில் செய்ய வேண்டிய வேலைகள் பலவிருக்கின்றன. அவைகளையோசித்துத் தீர்மானிக்கும்படி வேண்டுகிறேன். நம்மிடமிருக்கும் பலத்திற்குத்தகுந்தவாறு தீர்மானங்களைச் செய்து அவைகளை அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதேசாலும். சிலவற்றை மட்டும்யான் இங்கு கூறுகிறேன். பினாங்கில் ஓர் நகர விடுதி வேண்டுமென்று முன் மகாநாட்டில் தீர்மானித்திருப்பதை இன்னமும் தாமத மின்றி ஏற்பாடு செய்ய வேண்டுமன்றோ? விடுதி யொன்றிருந்தால் சல்லிசென்பதை எல்லோருமே ஒத்துக் கொள்ளுகிறார்கள். தாய் நாட்டிற்குச் செல்பவர்கள் ஏராளமாகஒவ்வொரு கப்பலுக்கும்பினாங்குக்கு வருகிறார்கள். சாமான்கள் கொண்டு போவதால் சென்னபட்டணத்தில்எவ்வளவுகஷ்டமேற்பட்டாலும்சுங்கம் விதித்தாலும், வாங்கிப் போகும் சாமான்களுக்கு அளவேயில்லை. இவைகளைப் பினாங்கில் ஏற்றுவதென்றால் அது பெரிதும் துன்பமாயிருக்கிறது. டிக்கட் வாங்குவதென்றால் கிடைப்பதரிதே! நம் சாமான்களை ஏற்றுவதற்கும் டிக்கட் முன்னமே வாங்கி வைப்பதற்கும் நமக்கென ஓர் ஏஜண்டு பினாங்கு நகர விடுதிச்சார்பில் இருப்பாரானால், அவசரமும் அவதியுமாகத் திரியாமல் ஊருக்குச் செல்பவர் சாவதானமாகக் கப்பலில் ஏறிக் கொள்ளலாம். கப்பலின் நங்கூரம் தூக்குவதற்குச் சிறிது நேரம் முன்கூட நம்மவரின் சாமான்களைக் கப்பலேற்றாது பாலத்தடியிற் போட்டு விடுவதை, ஆர்வத்தோடு சாமான் சேகரித்த பொருளுக்குடையார் கப்பலிலிருந்து பார்த்துத் துடிக்கும் துடிப்புத்தானென்னே! கப்பல் புறப்பட்டு நகரும் தருவாயில் எந்த மூலையிலோ விழும்படி தூக்கி எறிகிற காட்சி ஓர் வேடிக்கையாகக்கூட இருக்கிறது. தகுதியான

தலைவர் சிங்கப்பூர் ஸ்ரீமான் சுப. க. அ. வைரவன்செட்டியார்.

ஏஜண்டு இரங்கூனில் வைத்திருப்பது போலப் பினங்கிலும் வைத்துவிட்டால் இவைகளைப்பற்றிச் சிந்திக்கவேண்டாதபடி கப்பலில் முன்னமே ஒழுங்காக வைத்து விடப்படும். கப்பலில் நடைபெற்ற ஊழல்களைப்பற்றி மகா நாட்டு நிர்வாகக் கமிட்டியார் பெரிதும் போராடிச் சில சௌகர்யம் ஏற்பட்டிருக்கிறது. இருப்பினும் இன்னும் சரிவர ஏற்பட வில்லை. அவைகளைப் பற்றி நாம் அடிக்கடி சொல்லிக்கொண்டும் எழுதிக்கொண்டும் இருந்தால் நமக்குச் சாதகம் ஏற்படும். பினங்கில் நமக்கென ஏற்படுத்தும் ஏஜண்டு இவைகளனைத்தையும் கவனித்து வருவார். பிரஸ்தாப விஷயங்களை நடத்துவதென்றால் நிரம்பப் பொருள் வேண்டும். நம்மவர் எண்ணினால் பொருளைப்பற்றிக் கவலையில்லை. எல்லோரும் விரும்பும் இதற்குப் பொருள் தாராளமாகக் கொடுப்பார்கள். இதற்கென ஓர் தனிக்கமிட்டி ஏற்படுத்தி, தகுதியுள்ள சிலரை இதிற் றேர்ந்தெடுத்து ஜனங்களையும் வேண்டிக்கொண்டால் விரைவில் பொருளும் சேர்த்துவிடலாம்; காரியமும் கைகூடிவிடும். பெரும்பாலான பிரயாணக் கஷ்டமும் நீங்கிவிடும். சென்னை நகர விடுதியைப்பற்றி ரெங்கூன் நகரத்தார் சென்னைக் காரியஸ்தருக்குத் தெரிவித்திருந்தும் இதுவரை ஸௌகரியம் செய்து கொடுத்ததாகத் தெரியவில்லை. அதற்கு ரெங்கூன நகரத்தார் வேண்டுவ செய்வார்கள். பினங்கு நகர விடுதி சம்பந்தமாய்ச் செய்யவேண்டிய முயற்சி முடிந்தவுடனேயே சென்னையிலும் தனியே ஓர் விடுதி வைத்து காரியஸ்தரும் ஏற்படுத்தலாம்.

நம் பழந்தொழிலான வியாபாரத்தைத்தொடங்க வேண்டு மென்ற ஆசை அநேகருக்கு இதுபோழ்து உண்டாகியிருக்கிறது. இது மிகவும் போற்றத்தக்கதே யாகும். தற்காலத் தொழிலை மாற்றி அனைவரும் வியாபாரத்தில் தலையிடுவதென்றால் சாத்திய மில்லாதிருக்கலாம். இலேசு, இலேசாக வியாபாரத்தை உள்நாட்டிலும் நம் நாட்டினும் ஆரம்பித்து மிக ஜாக்கிரதையாகச் செய்து வரல் வேண்டும். இதிலும் நம் ஜாதியார் ஒற்றுமை காட்டினாற்றான் வியாபாரம் செம்மையாக நடைபெறும். நம் சாதியார் செய்யும் வியாபாரத்தை நாம் ஆதரிப்பதென்ற உயரிய நோக்கத்தை எக்காரணங் கொண்டும் நாம் மாற்றக்கூடாது. ஒருவர் செய்த முறையில் இலாபம் வந்தால் எல்லோரும் அதனையே ஆரம்பிப்பதென்ற முறையும் விரும்பத் தக்க தல்ல. வியாபார ஒழுங்கை யனுசரித்து இருசாராரும் நடக்கப் பழகவேண்டும். இம்முறை அநுசரிக்க முற்பட்டால் ஏராளமான நயம் கிடைக்கும். நம் பணம் நம்மவர்க ளிடத்திலேயே யிருக்கும். கேவலம் இந்நாட்டிலுள்ள பலசரக்குக் கடை ஒன்றை மாத்திரம் பற்றி யோசித்துப் பாருங்கள். மாதம் ஒன்றிற்கு எவ்வளவு ஆயிரத்திற்கு ஒவ்வொரு ஊரிலும் சாமான்கள் வாங்குகிறோம். முன் இந்நாட்டில் நம்மவர் இவ்வியாபாரம் செய்து வந்தது போல் இதுபோழ்தும் செய்துவரின் இலாப மனைத்தும் நம்மவர்க்குச் சேருமன்றோ? இது கேவலமான தொழில். வேறு கைத்தொழிலிலும் நம் கவனஞ்சென்றால் மிக நல்லதே. அதற்குப் பொருளும் தைரியமும் வேண்டும். முதலில் சில கஷ்டங்கள் நிகழக் கூடும். அதைச் சகித்து நடத்தி ஒழுங்குப்படுத்தி விட்டால் பின் பெறுவதெல்லாம் அத்தனையும் ஊதியமே. இவ்வழியில் பொதுஜன விஷயத்திலும் ஜாதிய விஷயத்திலும் பிரியமுள்ள இவ்வூர் ஸ்ரீமாந் சா. லெ. ராம. செ. செட்டியப்ப செட்டியார் அவர்கள் போற்றத்தக்கவர்களா யிருக்கிறார்கள். இதே ஊரில் ஓர் ரப்பர்த் தொழிற்சாலை வைத்து மிக அபூர்வமான சாமான்களெல்லாம் செய்து விற்பனை செய்து வருகிறார்கள். இம்முயற்சியில் நம் கவனத்தைச் செலுத்திவந்தால் கால அளவில் நல்ல நல்ல வியாபாரங்களும் கைத்தொழில்களும் சித்தித்துப் பெருத்தலாபத்தைத்தரும். இனி சிறுவர்களுக்குக் கல்வி பயிற்றும் விஷயத்தில் நாம் அதிகக் கவனஞ் செலுத்த வேண்டியவர்களாகவிருக்கிறோம். நம் ஜாதி முன்னேற வேண்டுமானால் ஆண் பெண் இருபாலாரும் நன்கு கற்றிருக்கவேண்டும். உலகத்தில் முன்னேறிய ஜாதிகளெல்லாம் அறிவு கைவரப் பெற்றவர்களே யாவர். நம் சிறுவர்களை சரிவரப் படிக்கு முன்பே இந்நாட்டிற்குக் கூட்டிவந்து விடுகிறோம். நம் நாட்டிலே ஒழுங்கான கலாசாலைகள் ஏற்படுத்திக் குறித்த காலம்வரை கல்வி பயிலச் செய்தல் வேண்டும். ஒரு கால் இங்கு பிள்ளைகளைக் கூட்டி வர நேரின் படிக்க நல்லதொரு பள்ளியில்லாது வீணான வழிகளில் சிறுவர்கள் பொழுதைப் போக்கிவிடுகிறார்கள். ஆகவே ஆங்காங்கே பெரிய ஊர்களில் தமிழ்ப்பள்ளிக்கூடம் ஏற்படுத்த முயற்சி யெடுத்துக் கொள்ளவேண்டும். ஆங்கில பாஷை இந்நாட்டிற்கு மிகுந்த உபயோகமாயிருப்பதாலும் நமக்குப்பிரயோசனத்தை நல்கக்கூடியதா யிருப்பதாலும் அதையும் சேர்த்துக் கற்பிக்கும்படி செய்யலாம். இம்முயற்சி சமூகத்தின் பிற்கால வாழ்விற்குமிக மிக இன்றியமையாததென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இந் நாட்டிலுள்ள தேவைகளை எல்லாம் நாம் உய்த்துணர வேண்டும். அதற்குப் பாடுபட வேண்டும். பிற ஜாதியார் போல் நாமும் கெம்பீரமாக வாழ வேண்டும். மானம் பேணி உயிர் வாழ்தலே நம்மரபிற் கழகு. நம்முள் ஏற்படும் விவகாரங்களைக் கோர்ட்டுக்குக் கொண்டு செல்லாது நம்முன் தக்காரிடம் சேர்த்துத் தீர்த்துக் கொள்ளுதல் வேண்டும். இந்நாட்டில் நம்மவர்க்கு நாணயத்திலும் யோக்கியத்திலும் சிறந்தவர்களென்ற பெயரிருக்கிறது. அதைக் காப்பாற்ற வேண்டுமானால் கோர்ட்டேறாதிருப்பதே நலம். கொஞ்சம் சகிப்புத் தன்மையை நம் ஜாதியின் நலன் கருதியேனும் கைக்கொள்ளவேண்டும். வெற்றியும் தோல்வியும் நமக்குள்ளேதான நிகழ்ந்து நிற்கிறதென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். நமக்குள் ஒருவர்க்கொருவர் அபிப்பிராய பேத மிருப்பினும் பகைமை பாராட்டாது விஷயத்தில் மாத்திரம் கவனஞ் செலுத்தி எவ்வளவு நியாயமாகவும் உண்மையாகவும் நடந்துகொள்ள முடியுமோ, அவ்வாறு நடந்துகொண்டால் விஷயம் சீர்ப்படுவதோடு நமக்குள் அன்பும் வளரும். பொறாமைக்கு நம் ஜாதியிலேயே இடமில்லாதபடி செய்ய வேண்டும். பொறாமையினாலேயே அநேக விஷயங்கள் கெட்டு விடுகின்றன. பொறாமை கண்டவிடத்து நம் அறிவு கொண்டு அதை யடக்கி விடுதல் வேண்டும். ஒரு விஷயத்தைப் பற்றிக் கொண்ட அபிப்பிராயத்தைத் திடீரென்று பிறர் சொல்வதற்காக மாற்றிக் கொள்ளக்கூடாது. யார் எதைச் சொன்னாலும் அப்பொருளின் உண்மைகண்டு ஒழுகுதல் வேண்டும். உண்மைப் பொருளைக் கண்டு கொள்வதென்ற திடசித்தத்தை பொது ஜனங்கள் கொண்டு விடுவார்களானால் அவர்கள் கூடிய விரைவில் முன்னேறி விடுவார்கள். இத்தகைய திடசித்த அறிவுள்ளவர்கள் எதற்கும் பயப்படவேண்டிய அவசியமேயில்லை. திடசித்தர் துவக்கும் காரியமனைத்தும் வெற்றியே பயக்குமன்றோ? ஒருகால் தவறினும் அவர்கள் நம்பிக்கை வீண் போவதில்லை. காரியங்களனைத்திற்கும் அவர்கள் நம்பிக்கையே உறுதுணையாக விருந்து உதவி செய்யும். இன்னோரன்ன நலம் பல கொண்டு ஜாதியப்பணி செய்வோமாக.

அன்பார்ந்த நண்பர்களே!

இதுவரை பேசிவந்த விஷயங்களைக் கேட்ட உங்கட்கு எனது வந்தனம். இனி இங்கு நடக்கவேண்டிய விஷயங்களைக் கவனித்துச் செய்யுமாறு வேண்டுகிறேன். நம் வேண்டுகோள் அனைத்திற்கும் பூரண உதவியாக இருந்து அநுக்கிரகிக்குமாறு நம் குகப்பெருமானைப் பிரார்த்திப்போம். உண்மையாக நமக்கு நம் ஜாதியில் அபிமான மிருந்தால் இன்றைய தினத்திலிருந்து அதிகம் முனைந்து தளராது வேலை செய்வோம். பலருடைய கவனத்தையும் உள்ளன்போடு நம் ஜாதிக்குச் செலுத்துவோம். நம் விடா முயற்சியால் எல்லாம் சீருற்று நம் ஜாதி இன்ப மயமாக இலங்க இறைவன் அருள் புரிவானாக.

---

